ஸ்ரீ:









ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# வேதாந்த விழுப்பொருள் விளக்கம்.

மேட்டுப்பாளையம் தெய்வகவி வித்வான்,

ம. ராஜு தாஸர்

இயற்றியது.








மதுரை,

ஹரிஸமய திவாகரம் பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

1934.

ஶ்ரீ:

# ஆசிரியர் வரலாறு.

இந்நூலாசிரியராகிய தெய்வகவி வித்வான் **ம. ராஜு தாஸர்,** வட ஆற்காடு ஜில்லா போளூர்த் தாலூகா தென்பள்ளிப்பட்டைச் சார்ந்த மேட்டுப்பாளையம் கிராமத்தில் கலி 4979 ஈச்வர வருஷத்தில் பூவைசிய வேளாளர் குலத்தில் மன்னார் செட்டியார் என்பவருக்குப் புத்திரராய்த் தோன்றினார். இவரது 10-ம் வயதில் இவரது தந்தை வீடுற்றார். இவர் சிறுவயதிலேயே தமிழ்க்கல்வியில் தேர்ச்சி பெற்றிருந்தார். இருபத்துமூன்றாம் வயதில் இவருக்கு விவாகம் நடைபெற்றது.

பிதுரார்ஜிதங்களை யெல்லாம் இவருடைய தமயனார் விரயம் செய்துவிட்டமையால் இவர் சுமார் முப்பத்தைந்து வயதுவரை வியாபாரத்தின் மூலம் தமது குடும்ப காலக்ஷேபத்தை நடத்தி வந்தார். அக்காலம் வரை இவர் எம்மதமும் சம்மதம் என்ற கோட்பாடு உடையவராகவேயிருந்தார். பின்பு சில பரதேசிகளின் உதவியால் சிவாத்வைதத்தை அறியலானார். இவருடைய கிராமத்தைச்சுற்றி நாற்பது மைல் சுற்றளவுக்கு எங்கும் சிவாத்வைதமே பரவியிருந்ததாயினும் அதில் இவர் திருப்தியடைந்தாரில்லை.

ஆகவே திருமாலருளால் வைணவமதத்தில் ஊற்றம் பிறந்தமையால் இவர் அம்மதநூல்களை ஒன்றன்பின் ஒன்றாக முறையே கற்று அப்பெருமானருளால் தெளிவடையலானார். இருபத்தைந்தாவது வயதிலேயே தமது குலாசாரப்படி ஸமாச்ரயணம் செய்விக்கப் பெற்றிருந்தமையால், பின்பு இவர் ஸ்நானம், அனுஷ்டானம், புண்ட்ர

தாரணம், திருவாராதனம் முதலிய வைணவ ஒழுக்கங்களைக் குறைவற நடத்தும் இயல்பினரானர். இவர் கிராமத்தில் இவரால் திருத்த மடைந்து வைணவ ஒழுக்கங்களை மேற்கொண்டவர் மிகப்பலர் என்றே கூறலாம். இவருக்கு ஒரு புத்திரனும் இருபுத்திரிகளும் உண்டு.

இவர் இந்நூல் மாத்திரமன்றி அத்வைதபரமாய் 75 கீர்த்தனை களும், ரகுமகாராசன் சரித்திரம், சாவித்திரி சரித்திரம், காலக்ஷேபத் திற்கேற்ற முறையில் வைணவபரமான கீர்த்தனங்கள் முதலியவையும் இயற்றியிருக்கிறார்.

இந்நூலில் பல மதங்களின் தோற்றம் அவற்றின் இயல்பு முதலி யவற்றை, சாமானியரும் படித்துப் பயனடையத்தக்க வழியில் விளங்கக்கூறியிருக்கிறார். செய்யுள் நடை இனிமையாயும் தெளிவா யும் அமைந்திருப்பது பாராட்டத்தக்கது.

இது ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் ஸ்ரீ. உ. வே. **அண்ணங்கா ராசாரிய ஸ்வாமி** கிருபையினல் திருத்தமுற்று ஆசிரியர் செலவில் அச்சிடப்பெற்று வெளிவந்துளது. ஆதலால் யாவரும் இதனை ஆதரித்து இன்னும் இப்படிப்பட்ட முயற்சியில் இவரை ஊக்குமாறு வேண்டிக்கொள்ளப்படுகிறது.

---



ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

மேட்டுப்பாளையம் தெய்வகவி வித்வான்

ப. ராஜுதாஸர் இயற்றிய

# வேதாந்த விழுப்பொருள் விளக்கம்.

—o—

[விஷ்வக்ஸேநர் துதி.]

மாதவன் பரத்துவத்தை மகிழ்வுடனுரை செய்தற்கும்
ஆதவனுள்ள மட்டும் அருங்கலை விளங்குதற்கும்
தீதணுகாது காத்துச் செம்மைசெய் திறலோனெங்கள்
நாதனும் சேனைநாதன் நலங்கழல் வணங்குவோமே.

[நம்மாழ்வார் துதி.]

ஒளிமிகு நாரதன் வியாதனுக் குரைசெயும்
களிமிகு காதையைக் கழறிட வெண்ணினேன்
தெளிவுறு தென்குரு கைக்கதி பதிதன்
நளினபொற் பதமலர் நன்முடி சூடியே.

[ஆசாரியன் துதி.]

இறைவருங்காணுப்பெருமையையுடைய
எட்டெழுத்துட்பொருளெனக்குத்
திறமுடனோதியருள்செயும்ஞான
தேசிகன்பாரத்துவாச
மறையவர்குலத்தில்வந்தசீர்வேங்கட
வரதனுமாரியனளித்த
இறையவன்நைனுராரியன்பதத்தை
யின்பமாய்த்தொழுதெழென்மனனே.

[வித்யாகுருவின் துதி.]

வித்தியாகுருவாயென்னைவிளக்கமதாக்கிவைத்த
சத்தியசீலன்கர்ணன்தன்தொழில்பூண்டமேலோன்
கற்றுணர்வதனுலோங்கிக்கலசமாநகரில்வாழும்
பற்றரும்பச்சையப்பபிள்ளைதன்பாதம்போற்றி.

[விஷ்ணு துதி.]

மெஞ்ஞானகுருவாய்வெகுவிதமான
விடையெடுத்தோதியென்னுளஞ்சேர்
அஞ்ஞானவிருளையோட்டிநித்தியத்தை
அன்புடன்காட்டிடவருளோ
டெஞ்ஞான்றுமென்னுள்தங்கியேயிருந்தும்
இணையிலாமகிழ்ச்சியையீந்தும்
நன்ஞானமளித்தநலமுறுசோதி
நாரணன்பதமலர்பணிந்தேன்.

[நூல் வரலாறு.]

எங்கணும்நிறைந்தவத்து இன்னதென்றுணர்வதற்குச்
சங்கையையுண்டுபண்ணும்சமயங்கள்பலவாய்க்கண்டு
மங்கலில்ராஜூதாசன்மனக்கணுக்கறிவின்கண்ணே
பொங்கியவருளைக்கொண்டுபோதனைசெய்ததிந்நூல்.

[ஆக்கியோன் வரலாறு.]

சீர்கொண்டநடுநாட்டுத்திருப்பதியாந்
திருக்கோவலூர்தனக்கு
நேர்கொண்டவடதிசையில்தென்பள்ளிப்
பட்டில்நிகழ் ராஜூதாசன்
கார்கொண்டமேனியன்றன்கருணையினுல்தன்னுளத்திற்
கண்டவெல்லாம்
பார்கண்டுகளித்திடுகெனக்கருதிஇந்நூலைப்
பதிப்பிலிட்டான்

சற்குருநைனாராரியர்வாக்கால்
தந்திடுமலரெலாங்கொண்டு
நற்புகழோங்குஞ்சுருதியிலுரித்த
நாரினிலொன்றிடச்சேர்த்து
விற்பனன்ராஜூதாசனின்னறிவால்
விளங்கிடத்தொடுத்தபாமாலை
அற்புதமென்றுவைணவரெல்லாம்
அணிந்தெனையாட்கொளல்வேண்டும்
ஆனாலுமிந்நூல்தன்னில்அருஞ்சொற்களில்லையேயென்னில்
வானாளும்விரிந்தநூல்கள்வாசியாமாந்தரெல்லாம்
தானாகத்தெரிந்துகொள்ளத்தக்கதாய்வெளிதாய்ச்சொன்னேன்
ஆனதவறிவினோர்கள்ஆய்ந்திடார்இதனிற்குற்றம்.
அன்ன வாகனத்தின் முன்னும் அஞ்சிறைக் கருடன்முன்னும்
சின்னதோர் மசகந்தானும் சிறகாட்டிப் பறப்பதேபோல்
உன்னித வாணர்முன்னே உகப்புட னடியேன்சொன்ன
புன்மொழி தன்னிற்குற்றம் பொறுப்பது புலவர்மாண்பே.
அம்மைநம் பிராட்டி நோக்கோ டச்சுதன ருளினாலும்
நம்மையாள் வரயோகீசன் நல்லருட் பெருக்கினாலும்
எம்மையாள் நைனாரார்யன் இணையடி துணையாக் கொண்டு
செம்மையாய்ச் சொலத்துணிந்தேன் தேர்ந்தவர் பிழைபாராரே.

[பரதத்துவ நிர்ணயம்.]

அறிவதே பொருளையெல்லாம் அளித்தோர் பரமேயாகும்
அறியவன் தேவர்மூவர் அனைத்துக்கு முதல்வனாவான்
அறிவினுக் கழிவிலாத ஆகாயம் வடிவமாகும்
விரிவினில் வாயுதேயு விளங்கிடா தரூபமாமே. (௰௨)

உருப்பட வப்புதானும் உலகின்முன் தோற்றலாலும்
திறப்படும் பூமிரூபம் தெளிந்துபின் தோற்றலாலும்
குறிப்புடன் மண்ணிலங்கி கூடியே காணலாலும்
விருப்புடன் அப்பாம்மாலை விண்ணவர் கோனென்றோமே. (௰௩)

சங்கரன் றலையிற் சதுமுகன் கரத்தில்
தாமரைக்கண்ணன் தா ளுதித்த
கங்கையா லிருக்குங் காரணத்தாலும்
காயத்ரி யிருமுன் நான்கினிலும்
சங்குட னாழி தரித்தவ னமம்
தலைமையாய்க் கூறுவதாலும்
புங்கமாம் வேத மொழிவதை யறிந்தும்
புகன்றனம் அரிபரனென்றே.

உமைசிவ கணங்களுக்கிங் குக்கிர கோரரூபம்
சமைகொளும் மாலிலக்மி தம்முடைக் கணங்களுக்கு
அமைவுள சுந்தரஞ்சேர் அரியகல் லுருவமாதல்
தமையறிந் தரியேதெய்வம் தானெனச் சாற்றுவோமே. (௰௫)

பயந்தருங் கடல்நீர் பொங்கிப் பகிரண்டமெல்லா மூழ்த்த
அயனர னிந்த்ரன் முன்ன அனைத்தையும் விழுங்கித் தானோர்
நயந்தருங் குழவி யாகி நாராணன் காத்த லாலே
உயர்ந்தவன் அரியென் றேயாம் உரைத்தனம் துணிவுகொண்டே. (௰௬)

அறிவுசாத் துவிகமாகி அளவிலாப் பிராகிரு தத்தால்
மருவிய ரசோதமங்கள் வந்துமே தோன்ற லாலும்
குறுகிய ரசோதமத்தைக் கூறுவெவ் வேறதாக்கிப்
பெருகிய சாத்விகத்தைப் பெற்றவனரியேயாமால். (௰௭)

மூவரு மொடுங்கும் பிரமமே விண்டு
யாவருந் திகைக்கும் மாயையே பிரமன்
தேவருந் துதிக்கும் சிவனே சிவனும்
மேவருஞ் சிருட்டி மெய்மையிவ் விதமே. (௰௮)

அரயனயன் கொடுக்கும் வரங்கள்யா வையுமவ்
வரியினால் அழிந்திடலாலும்
திரமுடன் அரியாற் கொடுத்திடும் பதங்கள்
திறம்பிடாதிருத்தலினாலும்
அரனயனன்பர் அறம்பொருளின்பம்
அவைதமை விரும்பலும் அரியை

உரமுடன் அடைந்தோர் விடுநச்சுதலால்
உரைத்தனம் அரிபரனென்றே. (௰௯)

துர்நீதி செய்யும் அவுணர்கள் தமக்குத்
துணையர னுதவி னுலும்
நன்னீதி புரியும் மனுக்கள்தே வருக்கு
நாரணன் துணைசெய்த லாலும்
புன்னீதி யாலே தேவரை யரக்கர்
புரிந்திடுங் கொடுமையைத் தவிர்ப்ப
தென்னீதி யென்றவ் வரக்கரைத் தொலைத்த
எம்பிரான் பரனென மொழிவாம். (உ௰)

சேடனு ரணனைத்தேடிச் சிவிகையும் அணையுமானுன்
தேடியபிரமன்தன்னைச் சினேகமாய்க்கொண்டான் பின்பு
நாடிய அரன்மேலேறி நல்லணியானவாற்றைக்
நாடியே பரன்மாலென்று நாமுமேயுரைசெய்தோமால். (உக)

காசியிலிறப்போர் தங்கள் காதினில் விசுவநாதன்
பேசிடு தாரகத்தாற் பெரும்பதங் கொடுத்தலாலும்
தேசுறு திருமண் மேனுக் கலுந்திரு நீறுதானும்
மாசறக் குறுக்கா மாற்றுல் மாதவன் பரனென்றேமே. (உஉ)

அயன்சிர மொன்றை அரன்பறித்திடவும்
அச்சிரம் அவன்கையைப் பற்றப்
பயந்தரும் பிரம கத்தியுமவனைப்
பற்றவே யலைந்திடுங்காலை
நயம்பெற வுமையாள் துதிசெய விரங்கி
நாரணன் துயர் கெடுத்தாண்டான்
உயர்ந்தவர் இதனுல் அரிபரனென்றே
உறுதியாயுரைக்கலுற்றனரால். (உ௩)

முன்னமோர் காலம் முனிவரோ டும்பர்
மூவரில் முதல்வன் யாரென்று

உன்னியே அதுதான் முடிவுறு வாற்றல்
உயர்ந்திடும் பிருகுமா முனிவர்
அன்னதை யறிந்து வருகுவே னெனச்சென்
றவர்களைத் தனித்தனி யாராய்ந்
தின்னவர் தம்மில் அரிபர னென்றே
இயம்பிய தறிந்துநா மிசைப்பாம். (உச)

அரனொரு காலம் அமரர்தம் அவையில்
ஆனந்த மேவிட வமர்ந்து
பரனரி யந்தர் யாமியா யென்னுட்
பதிந்திருந் திடுவதா லெனக்குத்
திரம்பெறும் பேரும் யாரினும் உயர்வும்
செப்பொணு மேன்மையுங் கிடைத்தே
உரமதை யடைந்தேன் என்றுரைத் ததனுல்
உரைத்தனம் அரிபர னென்றே. (உரு)

அரக்கனுஞ் சூரன் தமமுறு தவத்திற்
காயிரத் தெட்டுள அண்டம்
உரைக்கொணு வரங்கள் யாவையு முதவி
ஓரடி யவனிட மேற்றுத்
தரிக்கொணு வருத்த மெய்தியோர் காலத்
தரணியி லூன்றிமற் றோர்கால்
பெருக்கவே துடைமேல் மடித்தரி யருளே
பேணிய அரன்தவம் சான்றே. (உசூ)

அனங்கனுர் நாரா யணமுனி தவத்தை
அழிக்கமாட் டாமையி னுலும்
சுணங்கிய அரனுர் தவத்தினைக் காமன்
சுருக்கினில் அழித்திட லாலும்
கனம்பெறு முனிசா பத்தினுல் அரன்றன்
கண்ணினு லெரிபட லானுன்
மனங்கவர் மதனன் தனைச்செயித் திடவும்
வகையறி யானர னென்றேம். (உஎ)

அரியவ னேறுங் கருடனே வாசம்
ஆகாயந் தன்னிலே யாகும்
மறையவ னேறும் அன்னவா கனந்தான்
மாநிலக் கங்கையில் வாழும்
உரியவ னுமைகோன் ஏறிய காளை
உலகினில் நடந்திடும் இதனல்
பெரியவன் அரியே யன்றியோர் தெய்வம்
பேசிடு மறைகளுங் காணேம். (உअ)

வாணனுக் காக வீசன் மக்களுந் தானு மாக
சோணியிற் கண்ண னேடு தொடுத்தபோர் தன்னில்நக்கன்
நாணியே புறந்தந்த நாதனைப் பணிந்து போற்றி
வாணனைக் காத்த லாலெம் மாயனே பரனென் றேமால் (உகூ)

திக்குப்பா லகரில் ஒருவனு யீசன்
சேர்ந்திருப் பதிலுமெம் மாயன்
மிக்கதே வேந்த்ரன் பூசனை செய்ய
மேன்மையோ டிருப்பதி னுலும்
சிக்கெனப் பத்மா சூரனுக் கஞ்சும்
சிவனை வேற் காயினி லொளிக்க
அகருறை தீர்த்தோன் அரியென லாலே
அவனலால் தெய்வம்வே றுண்டோ (௩௰)

ஒருகரத்தைக் கீழ்நோக்காற் பாதங் காட்டி
ஒருகரத்தை மேனேக்கிற் சிரத்தைக் காட்டிப்
பரனரியின் பாதத்திற் பிறந்த கங்கை
பாருங்கள் என்தலையில் இருந்து கொண்டு
திரமுடனென் பவமதனைப் போக்கி யென்னைச்
சீவர்களுக் கீசனெனச் செய்த தென்று
அரன்காட்டுங் குறிப்பறியா நுங்க ளிக்கிஃ
தறிந்துரைத்தேன் நாரணனை யடைகு வீரே. (௩க)

அருமறை யாவும் அடங்கும்வே தாந்தத்
தாங்கது தன்னிக ரில்சீர்
மருவிய அட்டாக் கரமதி லொடுங்கும்
மற்றது பிரணவத் தொடுங்கும்
திருமிகு பிரணவம் அகாரத்தி லடங்குஞ்
சேருமவ் வகாரம்நா னென்று
பெருகிய கீதை பார்த்தனுக் குரைத்த
பிரானையே முதல்வனென் றுரைப்பாம். (௩௨)

பிரமதே சசுநா ராயணனிடத்திற்
பூரணம் பிரமனு ரிடத்தில்
மருமமா முக்கால் உருத்திரன் பாதி
வாசவன் கால்சுரர் பங்கில்
மருவிய வரைக்கால் மனுக்கள்பால் வீசம்
மற்றவர்க் கிடைக்கிடை குறைந்து
கருமமாம் வினையாற் சுருங்கியே காட்டும்
காரணத் தாலரி பரனே. (௩௩)

சகலமுந் துறந்தென் றன்னைமெய்ஞ் ஞானத்
தாற்பர மென்றுநன் குணர்ந்தே
அகலிடங் காணு தெம்மையே சரணம்
அடைந்தவர் பவமனைத் தினையும்
பகலவன் முன்னே பனியென வெரித்துப்
பரமதாம் வீடளிப் பேனென்
றிகலிலாச் சரம சுலோகநல் விசயற்
கியம்பினன் கீதையுஞ் சான்றே. (௩௪)

அன்றொரு காலங் கஜேந்திர னென்னும்
ஆனையொன் றுயிர வருடம்
குன்றுபோல் முதலை வாயினிற் பட்ட
குறையினு லெங்கணும் நிறைந்து
நின்றிடும் ஆதி மூலமாம் பொருளே
நீயெனைக் காக்கவா வென்னக்

கன்று மேய்த் துகந்தோன் வந்துகாத் தலினுற்
கண்ணனே பரமென மொழிவாம் (௩௫)

நாமரூ பங்க ளின்றி நாதாந்த மயமாய் நின்ற
சாமனைப் பயந்த தாதை காரண மிருந்த தாலே
தாமறி வென்று நாமஞ் தரித்தரி யாகி நின்றான்
ஆமிதால் ஆதி மூலம் எனும்பெயர் அரிக்கா யிற்றே (௩௬)

சஞ்சிதப் பிராகிரு தத்தின் தடிப்பது மனமாய்த் தோன்றும்
வஞ்சகத் தாம தத்தின் வடிவகங் கார மாகும்
துஞ்சலில் இராச தத்தின் தோற்றமே புத்தி யாகும்
விஞ்சிய சாத்வி கந்தான் விளங்கிடுஞ் சித்தமாமே. (௩௭)

சித்தசாத் துவிகந் தானுந் தேடிடுஞ் சத்துத் தன்னைப்
புத்திரா சதத்தி னோடு பொருந்திடுஞ் சித்துத் தன்னை
அத்திசெய் தமோகு ணந்தான் அற்பமாம் இன்பம்நாடும்
இத்திரி விதந்தான் இன்பம் வீடறம் பொருளென் றுமே. (௩௮)

அவ்வகங் காரந் தானெனப் பிரிந்தே
அகந்தையாந் தீவினை யேற்கும்
செவ்வையாம் புத்தி நல்வினை தனையும்
தீவினை தன்னையுங் கொள்ளும்
எவ்வகை வினையுஞ் செய்திடாச் சித்தம்
ஏகமாம் பொருளதை நாடும்
இவ்விதம் பஞ்ச பூதபௌ திகங்கள்
எழுவகைத் தோற்றமா யினவே (௩௯)

சச்சிதா னந்த மூன்றுந் தான் வெளி வாயு தேயு
சுத்தசாத் துவிகந் தானும் துலங்கிய அப்பு வாகும்
சித்தமே பார தாகச் செனிக்குமிவ் வைந்தும் பின்பு
சத்தமே பரிச ரூப ரசமொடு கந்தந் தாமாம் (௪0)

கர்லெரி யாகர் யத்தைக் காரிய ரூப மாக்கி
மேலதாம் அப்பு ரூபம் விளங்கிடச் சூக்ம மாக்கிச்

கோல மாம் பூமி தன்னைக் குறிப்புடன் தூல மாக்கிப்
பாலதாங் கடலின் மீது பள்ளிகொண் டிட்டான் மாலே (சக)

காரணம் அறிவ தாகுங் காரியம் அரியே யாகும்
நாரணன் சூக்ம மாகும் நவின்றிடுந் தூலந் தன்னை
ஆரணம் விண்டு வென்றும் அவனுடைய யுந்தி தன்னில்
பூரணப் பிரமன் தோன்றிப் பொருந்தினன் ரசோ குணத்தை (சஉ)

அந்தநற் பிரமன் தானும் ஆயிர வருட காலம்
வந்ததோர் வழிகா ணுமல் மங்கியே கிடக்கும் காலை
செந்திரு மாலு மாங்கே செபித்தனன் பிரண வத்தை
விந்தையாம் பிரணவத்தால் விரித்தனன் உலகம் யாவும்
அந்தநற் பிரமன் தானும் ஆயிர வருட காலம்
வந்ததோர் வழிகா ணுமல் மங்கியே கிடக்குங் காலை
செந்திரு மாலு மாங்கே செபித்தனன் பிரண வத்தை
விந்தையாம் பிரண வத்தால் விரித்தனன் உலகம் யாவும். (சஙு)

பிரிதிவியி னம்சத் தாலே பிரமனைத் தோற்றிப் பின்பு
அரியவ னருளாற் சிருட்டி ஆரப்பம் செய்யும் காலை
மருவிய தமோ குணத்தை வடிவமாய்க் கொண்டயன் தன்
புருவத்தி னிடையுருத்ரன் புலப்படப் பிறந்தான் மாதோ. (குச)

அன்னருத் திரன்மேற் பன்னொரு பெயரை
அடைந்துபின் பன்னொரு கோடி
பின்னமாம் பூத கணங்களைப் படைத்துப்
பெருக்கவே யவற்றுடன் கூடித்
தன்னையே பரமாய் நினைந்துதா மதத்தாற்
சகலமும் ஆனந்த மென்று
உன்னித மான வேதங்கள் தமையும்
உலகங்கள் தம்மையும் அழிப்பான். (சரு)

பரமான அரியினுக்குப் பத்தினி மூவ ராகும்
திருபூதேன் பதுமூ வர்க்குஞ் செப்பிய நாம மாகும்

உரமாஞ்சீ தேவி யென்றும் உரிமைப்பூ தேவி யென்றும்
முறைமைமூ தேவி யென்றும் மூவர்க்கும் பெயர்வே றுமே. (சகூ)

சாத்விகந் தானே சீதேவி ராசதம்
காத்திர மான பூதேவி தாமதம்
நேத்திர மற்ற மூதேவி மூவர்
தோத்திரந் தனக்குத் துணையருள் செய்வான். (சஎ)

சீதேவி தனைப்புணர்ந்து செகங்களைத் திதித்தல் செய்வான்
பூதேவி தன்னைச் சேர்ந்து பொருள்களைச் சிருட்டி செய்வான்
மூதேவி தன்னைக் கூடி முழுமையும் சங்க ரிப்பான்
ஆதலாற் பிரம மென்றே அரிதனை மறைகள் சொல்லும். (சஅ)

சத்ததே சர்வ சாட்சியு மாகுஞ்
சகங்களைச் சிருட்டிசெய் வதனால்
சித்ததாய் முடியும் சித்தினில் தோன்றும்
தீவினை நல்வினைப் பயனால்
நித்திய மெனவும் தான்பர மெனவும்
நினைத்திடில் ஆனந்த மாகும்
ஒத்திடு மூன்றில் சத்ததாம் அரியை
உயர்பர மென்றுநாம் உரைப்பாம். (சகூ)

அந்தகன் உலகம் அடைந்தவர் நரகம்
அழுந்தியே துன்புற லாலும்
இந்திர னுலகம் எய்தினர் போக
இன்பமே நுகர்வத னாலும்
முந்திய இரண்டில் உயர்ந்திடு சொர்க்கம்
முன்னிய மால்பத மென்று
சிந்தையி லோர்ந்தே அரிபர னென்று
தீர்க்கமா யுரைத்திடு வோமால். (ருய)

அந்தமாம் பிரமன் தசவடி வாகி
அனைத்தையும் சிருட்டிசெய் ததன்பின்

சுந்தர விண்டு சூரர்பன் னிருவர்
சொருவமாய்த் தோன்றிக்காத் திடுவன்
அந்தகன் முதலாய்ப் பதினொரு ருத்ரர்
அனைத்தையும் அழித்திடு வாரால்
இந்தநீர் மையினுல் முத்தொழில் நடக்கும்
ஈதரி திருவிளை யாட்டே. (ருக)

அரியவ னம்சம் சொர்க்கத் தமரர்க ளாகி நிற்பர்
உரிமையாம் பிரம னம்சம் உலகினில் மனுக்க ளாவார்
பரிவுடன் ருத்ர னம்சம் பாதலத் தவுண ராவார்
திரிவிதத் தினிலும் சொர்க்கத் தேவரே யுயர்ந்தோராமே. (ருஉ)

நாரண னம்சம் பறவைக ளாகும்
நான்முக னம்சமே விலங்காம்
வாரணம் போன்ற வுருத்திர னம்சம்
மண்ணினில் ஊர்வன முதலாய்ப்
பூரண மின்றி நகர்வன தவழ்வ
புழுமுதற் சென்துக்க ளாகும்
ஆரண மமரர் மனுக்களு மிதனுல்
அரன்றனைப் பழித்திட லானுர் (ருங)

## வைணவ உற்பத்தி.

அனைவருந் தனைப்பழிக்க அரன்மிக நெஞ்சம் புண்ணய்
நினைத்துநல் விரிஞ்சன் பக்கல் நின்றுமே முறையு மிட்டான்
மனத்தினிற் கருணை கொண்டு மண்பொதுத் தந்தை தானும்
நினைத்தொடர் பாழிபா வங்கள் நீங்கிட வழிகேள் என்றான். (ருச)

உன்னையும் படைத்திவ் வுலகையும் படைத்தே
என்னையும் படைத்த எம்பிரா னொருவன்
தன்னரு ளாலே சகலமு மாமென்
றுன்னியே யவனுக் குரிமையா யிருந்தே. (ருரு)

மறைமுடி வான ஆண்டவ னரியை
மனத்தினிற் றியானமாய்க் கொண்டு

முறையினில் வாக்காற் சகத்திர நாமம்
முழுமையுந் துதித்துமே போற்றிக்
குறையொழி காயத் தாலவன் பூசை
குறைவறத் தினமுடித் திருந்தால்
அறைவுறும் வினைகள் வந்துனைச் சேரா
அனற்படு பஞ்சென வழியும். (ருசு)

என்றுமே வேதன் வேதங்கள் தம்மை
யிடையிடை யெடுத்தொடுத் தோதி
அன்றரன் றன்னை வைணவ னுக்கி
அழைத்துநல் வைகுந்தந் தன்னிற்
சென்றரி பாத பூசையை முடித்துச்
சேவடிக் கங்கையை மனது
கன்றிய வீசன் சென்னியில் வைத்துக்
கங்காதர னெனப்பெயர் கொடுத்தான். (ருஎ)

அதுமுத லாக அரனரிக் கடியான்
ஆய்த்தினம் அவனடிப் பூசை
முதுமறைப் படியே முடித்துத்தன் னன்பர்
முனிவர்கள் தேவர்கள் தமக்கும்
இதுபர ஞான மென்றுநன் கியம்பி
யெங்கணும் வைணவந் தழைக்கச்
சதுமறை விளங்கச் சங்காரந் தன்னைச்
சாதித்து மேன்மையை யடைந்தான். (ருஅ)

ஆதிமூ லத்தின் அடியராய்ச் சிவன்றுட்
டனைவரு மாயின பின்பு
பீதிசேர் நரகும் அந்தக னரசும்
பிரமனுர் சிருட்டியும் பாழாய்
நீதியா லுலகங் களிலனை வோரும்
நெடியவை குந்தமே சேர
ஓதிய பிரமன் அந்தகன் முதலோர்
உம்பர்கோ னிடமுறை யிட்டார். (ருகூ)

நாரண னயனை நோக்கி நவிலுவான் மைந்த கேளாய்
ஆரணந் தன்னில் நம்மை அடைந்தவர் தங்கட் கெல்லாம்
காரண மாகு மென்றன் கதிதனைக் கொடுப்போ மென்று
பூரண மாயுனக்குப் போதனை செய்தோ மன்றே. (கூ0)

அப்படி யுனக்குச் சொன்ன அரும்பொருள் ரகசியத்தை
மெய்ப்பட அரனு ருக்கு விளங்கிட வுபதே சித்தாய்
செப்பமாய் ருத்ரன் றானும் செகங்களிற் பரவச் செய்தான்
இப்படி யாகச் சீவர் இறப்பொடு பிறப்பற் றாரே. (கூக)

ஆகையா லுலக விர்த்தி அதிகமாய்ப் பரவச் செய்ய
ஈகையாம் அரனார் தம்மை யிக்கணம் அழைப்பா யென்ன
வேகமாய்ப் பிரமன் றானும் வேதமந் திரத்தா லீசன்
தாகமாய் அரிசபைக்குத் தக்கணம் வரச்செய் தானால். (கூஉ)

அரனயன் அரியாம் மூவருங் கலந்து
அரன்றனைப் பரமெனக் காட்டும்
திரமுள சைவ சமயமொன் றாக்கித்
தீநெறி சிலவதிற் புகட்டி
வரன்முறை யாக மோகன நூல்கள்
வகுத்துல கைத்திருத் தென்று
உரமுள சிவனுக் கோதின னெங்கள்
உம்பர்கோ னாகிய மாலே. (கூந)

சிவசமய உற்பத்தி.

மறைமுடி வட்டாக் கரமதற் கீடாய்
மந்திரம் அஞ்செழுத் தென்றும்
குறைவற வணியும் ஊர்த்வபுண் டரமாங்
குறிக்குவெண் ணீறணி குறியும்
நிறைவுறு துளசி மரைமணி மாலை!
நீக்கிருத் ராக்கமே யாக்கி
முறையுறு பூணூல் சிகைமுதல் நீக்கி
முண்டித மாகியே யிருந்தும். (கூச)

தற்செய லாக விளைந்திடும் வினைகள்
தான்செயும் வினைக்னென் றின்ன
அற்புத மாகும் இருவினைப் பயனை
அனுபவித் திடப்பிறந் திறந்தும்
உற்பன மாகும் உலகங்கள் யாவும்
உனைப்பர மென்றுமே துதித்தால்
விற்பன மாகும் மோக்கமொன் றொழிய
வேண்டிய வரங்களைக் கொடுப்பாய் (கூரு)

உன்றனுற் கொடுக்கும் செல்வங்கள் யாவும்
உன்னரு ளென்றுமெண் ணுமற்
சொந்தமென் றெண்ணி யீயாத லோபத்
துவமதை யதை யடைந்திடு மவரும்
என்றனைக் கலந்து சைவமாம் நூல்கள்
இயம்பின தறிந்திடா தாரும்
அந்தக னுலகம் அடைந்தவர் வினையால்
அருநர கெய்திடச் செய்வாய். (கூசு)

நீதரும் செல்வம் யாவும் நினக்குநின் னடியாருக்கும்
ஈதற நல்கி யுன்றன் திருவடிக் கன்பு செய்யும்
ஓதரும் பெருமை யோருக் குன்பதம் கொடுத்துப் பின்பு
மாபெரும் வைண வத்தை மவுனமாய்ப் போதிப் பாயே (கூஎ)

இன்னதோர் விதமாய் வைகுந்த வாசன்
இயம்பிட அரனுரைத் திடுவான்
என்னையே பரமாய் முன்னம்யா னுரைக்க
இகழ்ந்துல கேற்றிடா ததனல்
உன்னையே பரமென் றுனக்கடி யவனுய்
உயர்ந்தனன் யானுமிவ் வுலகில்
அன்னதை மறைத்துக் கூறினு லிப்போழ்
தாரதை நம்புவா ரையா (கூஅ)

அப்படி யுலகம் ஒப்பிடி னுந்தான்
அருமறை முடிவதா முன்னை

இப்படி யிகழ்ந்துன் முத்திரை யணியா
திருந்துநான் கெடுவனோ வென்றான்
இப்படி யுரைத்த வீசனைத் தழுவி
எனக்குகப் பாகிய வொன்று
தப்பித மேனும் புண்ணிய மாகும்
சாதிப்ப தடியவர் கடனே (௬௯)

எனக்குகப் பில்லா வொன்றது தானும்
ஏறிய புண்ணிய மேனும்
மனக்குறை யான தீவினை யாகும்
வைணவ ரதுசெயார் நானுன்
தனக்குமுன் சொன்ன வேதகுக் குமத்தைத்
தராதல விருத்தியின் பொருட்டுச்
கனக்கவே செய்யென் றரனிட மிருக்கும்
கருணையாற் பின்னுமொன் றுரைப்பான் (எ௰)

எந்தனற் பத்த ரடைந்தபி னவர்கள்
இருந்ததோர் கூட்டினை யடியார்
செந்தழ லிட்டே யெரிப்பரச் சாம்பல்
திருமேனிக் காவலா யணிந்து
வெந்திடு மெலும்பை மாலையாய்த் தரித்தும்
விரித்திடெம் பாயலாம் பணியை
அந்தம தாகு மாபர ணங்கள்
ஆகநீ யணிந்திடு வாயே (எக)

முத்திரை யான துவாதச நாம
முறைமையாய் முத்தலைச் சூலம்
கைத்தல மதனில் தந்தன மேற்றுக்
கனமுடன் தோளினிற் றுங்கி
மெத்தவென் பக்தி யந்தரங் கத்தில்
வேற்றவ ரறிந்திடா தியற்றி
முத்தியை யடைவா யென்றுமே முகுந்தன்
முடித்தனன் சைவமாம் சமயம் (எ௨)

அரனயன் அரியைப் போற்றி
அன்புடன் விடையும் பெற்றுத்
திரனுள கைலைக் கேகிச்
சிலநாளிற் சைவ நூல்கள்
வரன்முறை யாகச் செய்து
மனிதர்க்குஞ் சுராசு ரர்க்கும்
உரமுட னுபதே சித்தே
உலகெங்கும் பரவச் செய்தான் (எங)

மாதவன் பெருமை தன்னை
மகிழ்வுடன் கூறு கின்ற
வேதத்தின் பொருளை யெல்லாம்
வியாக்யான பேத மாக்கி
நாதனு மீசன் மாயை
நட்பினல் நாத விந்து
ஓதிய சதா சிவம்பின்
உருப்படும் மயேச னென்றும் (எச)

பின்னுமே ருத்ர னுகிப் பீதாம்பரன் றனைப்படைத்து
நன்னய விண்டு தன்னுல் நான்முகன் தனையுண் டாக்கி
உன்னிதப் பிரம னுலே யுலகமும் படைக்கச் செய்து
தன்னுடை விளையாட் டாகச் சங்கரித் திடுவே னென்ருன் (எரு)

அப்படிக் கரனுர் செய்ய அயன்காமக் ரோத லோபம்
தபபடி யான மோகந் தன்னுடன் மதமாற் சர்யம்
மைப்படு டம்பாங் கார வல்லமை யாமோர் மாயை
ஒப்புடன் சிருட்டி செய்தே யுலகெங்கும் பரவச்செய்தான் (எசு)

சிவனயன் செய்த வற்றைச் சீவர்க ளனுச ரித்தே
அவனிமா னிடவர் தேவர் அசுரர்கள் அனைவோர் தாமும்
மவுனமாய் வேதங் கூறும் மருமத்தை மறந்தோ ராகி
அவுணர்போற் பிறப்பிறப்பை யடைந்துமுன் றற்ருர்வீடே (எஎ)

சிதரன் றுனும் இதுதனைக் கண்டு
சீவர்மேற் கருணையுங் கொண்டு
மாதவந் தானம் யாகநல் யோகம்
மகிழ்வுறும் பரோபகா ரங்கள்
காதலாஞ் சிரத்தா பத்திவை ராக்யம்
கனத்திட வல்லப மாகும்
போதமாங் கிரியா சத்தியென் றென்றைப்
புலப்படத் தோற்றினன் மாதோ (எஅ)

இவ்விதந் தோன்றும் கிரியையாம் சத்தி
எங்கணும் பரவிவல் லபத்தாற்
செவ்வையாம் சைவந் தன்னில்நா ரணனைச்
சேர்த்துமே பத்திகள் புரிந்து
அவ்விதத் தாலே கைலையை யடைந்தங்
கரனுப தேசமே பெற்றுப்
பவ்விய முற்ற வைணவ ராகிப்
பகுத்தறி வாளர்வீ டடைந்தார் (எகூ)

இன்னவிதம் வீடுபெறும் வைணவர்கள் சைவமதை யிகழ்ந்து கூறி
முன்னமறி வரியென்றுஞ் சீவனே சிவனென்றும் முடிக்துக் காட்டி
அன்னதொரு வேதமதை அறிவில்லா மாந்தரெல்லால் ஆனந்திக்கப்
பன்னுமுப தேசமதாற் சைவமதை யவுணரலார் பழித்தாரன்றே(அம)

அதுதனைக் கண்ட அரனொடு பிரமன்
அரியிடஞ் சென்றடி வணங்கிச்
சதுர்விதத் தாலும் மோகன நூல்கள்
சாற்றியும் நின்னடி யார்கள்
முதுமறைக் கயல தாகிய சைவம்
மோகன நூல்களென் றகற்றித்
கதுவிய ஞான போதனை யாலே
கனத்தது வைணவ மையா. (அக)

இன்னமுஞ் சின்னுட் சென்றிடிற் சைவம்
இருந்திடும் இடந்தெரி யாது
இன்னது செய்ய வேண்டுமென் றெங்கட்
கியம்பினல் அப்படிச் செய்வோம்
பன்னக சயனு என்றுரை செய்யப்
பத்தவற் சலனுமப் போது
உன்னிவே தாந்த அத்வைத மென்றே
ஒருமதம் உரைத்திட லானுன். (அஉ)

அத்வைத உற்பத்தி.

தனைவிட வேறு தெய்வம் தானுமே யில்லை யென்றும்
வினையெனு மாயை தன்னல் விளைந்திடுந் தேவர் மூவர்
மனமுதற் கரணத் தாலே வருமறை யுலகஞ் சீவர்
அனையவும் பொய்யாய்க் காட்டும் அஞ்ஞான மறைப்பே
யென்றும். (அ௩)

என்றுமே தன்னைத் தானே எதார்த்தமாம் சொரூப மென்றும்
நின்றுமே மறப்பு மற்று நிர்விகற்பச்சமாதி
ஒன்றுமே புரிந்திருந்திருந்தால் உருத்திரனயன் மால் தேவர்
சென்றவ னடிமையாகிச் சேவகஞ் செய்வா ரென்றும் (அச)

செய்வினை யிரண்டும் விட்டுத் தேகாதி போச ஞர்த்தம்
நைவன மேன்மை யாவும் நமக்கில்லை பிராந்தி யென்றும்
மெய்வகை யான தன்னின் மேன்மையை யறிந்த ஞானிக்
குய்வகை பிரமந் தானும் உலகமும் உயிரும் பொய்யே. (அரு)

தடையறு மிதுவே மெய்ஞ்ஞான மென்றும்
தமோகுணச் சோம்பலி னலே
உடையுண வுறக்க முதலிய துறந்திங்
குன்மத்த மவுனமா யிருந்து

அடைவுடன் கிடைக்கும் உண்டியை யருந்தி
அசுத்தமும் சுத்தமு மற்றே
இடைவிடாச் சுத்த சூனிய மாகி
இருப்பதே அத்வைத பரமாம். (அசு)

இப்படித் தெய்வ நாஸ்தி இயம்பிடும் அத்வைத தத்தைச்
செப்பிடு நூல்கள் தம்மைத் திறமுடன் செய்வாயாகில்
எப்படிப் பட்ட பேரும் இதனைமேற் கொள்வார் அப்போ
மெய்ப்படி வைண வந்தான் விளங்கிடா தடங்கு மென்றார். (அஎ)

அன்னதைக் கேட்டு ருத்ரன் அடக்கொணு வருத்த மெய்தி
என்னுடை நூலை நம்பி இருந்திடுஞ் சீவ ரெல்லாம்
பின்னர கெய்தி வாளா பிறப்பிறப் படைய வைத்தல்
அன்னீதி யன்றோ என்னை யாண்டிடும் பரமே யென்றார். (அஅ)

கஞ்சனே கால காலா கலங்கிட வேண்டாம் நீங்கள்
வஞ்சக அத்வைதத்தின் வகையெலாம் ஆராயுங்கால்
பஞ்சு போற் பறக்கும் பொய்யே பரமமாம் வைணவத்தை
விஞ்சிடக் காட்டும் புத்தி விளங்கிடார் அழுந்தி மாள்வார் (அக)

ஆதலால் ஆராயாமல் அத்வைதந் தன்னை நம்பி
தீதுறுந் தமத்தால் தன்னைத் தேவனென் றெண்ணி மாய்ந்தால்
பாதகம் உங்கட் கில்லை பாரெங்கும் பரவு மாறு
ஓதிடீர் என்றுரைக்க உற்சாகம் அடைந்திட்டாரே. (கூ0)

பின்னுமவ் வரியைப் போற்றிப் பிரமருத் திரர்கள் தாங்கள்
மன்னிடும் பதியடைந்தார் மாதவன் சைவ நூலை
முன்னிலை யாக வைத்து முறைமுறை அத்வைதத்தில்
உன்னித நூல்கள் செய்தே உலகெங்கும் பரவச்செய்தான். (கூக)

கஞ்சனும் அசுசி சோம்பல் கபடம் நித்திரை வெறுப்பு
மிஞ்சிய மமதை மந்தம் விபரீதம் பேதா பேதம்
துஞ்சிடும் இவற்றை யெல்லாம் தூண்டிடும் மாயை யொன்றை
வஞ்சக அத்வைதந்தான் வலுத்திடச் சிருட்டித் தானல். (கூஉ)

அப்பெரு மாயை யாலும் அரன்செய்த நூல்க ளாலும்
செப்பமாம் வைண வத்தைச் சீரிய ரன்றி மற்றோர்
ஒப்பிலார் அத்வை தத்தை உண்மையீ தெனவ டைந்து
இப்பெரும் பிறப்பி றப்பை எய்திவீ டற்றார் மற்றோர். (௬௩)

சீவர்க ளனைவோர் தாமும் தீநெறி யத்வை தத்தை
மேவியே நரக மெய்தி வீடிழந் தலையும் வேலை
ஆவிக்கு மாவி யான அரியவன் பரிதா பத்தால்
தாவிய கருணை கொண்டு தானுமிவ் விதம்செய் தானால். (௬௪)

பொறுமைநற் சாந்தம் தியானம் பூரணம் சமாதி நிட்டை
அருமை யட்டாங்க யோகம் ஆனந்தம் திடவை ராக்யம்
வெறுமையாம் அத்வைதத்தில் விளங்கிடக் காட்டு கின்ற
பெருமையாம் சத்தி ஒன்றைப் பெலமுடன் சிருட்டித் தானால்.()

அன்னதோர் சத்தி தன்னால் ஆயிரக் கணக்கி லொன்று
இன்னதை யடுத்தி ருந்தே இரந்தபின் கைலைக் கேகி
பன்னகா பரணன் தன்னால் பாஞ்சராத் திரம்போ திக்கப்
பின்னொரு சனன மெய்திப் பெரும்பத மடைந்தார் தாமே.(௬௬)

மற்றுமே சிலபே ரந்த மலினமாஞ் சிவாக மத்தை
உற்றுத்தா மதத வத்தால் உருத்திரன் கருணை யாலே
பெற்றனர் வரங்க ளாகப் பெருஞ்செல்வ மான வெல்லாம்
முற்றிலும் அடைந்தோர் தம்மில் முப்புராதி களைச் சொல்வாம்()

முக்கணன் தன்னா லன்றி முடிவிலைத் தங்கட் கென்றும்
மிக்கதோர் வரங்கள் தந்த மேன்மையாம் அரனார் தம்மைச்
சிக்கெனப் பூசை செய்து தேவர்கள் மனிதர் தம்மை
அக்ரமஞ் செய்ய லுற்றார் அனைவரும் கலங்கி னாரே. (௬௮)

அரக்கரின் கொடுமை தாளா தமரர்கள் முனிவர்கூடிப்
பெருக்கவே அரன்பாற் சென்று பீதியால் முறையு மிட்டார்
உருக்கமாய்ச் சிவனார் தாமும் ஒருபிழை யெனக்குச் செய்யா
திருக்கிறார் அவரைக் கொல்ல என்தனால் ஆகா தென்றார். (௬௯)

அதுதனைக் கேட்டு முனிவர்வா னவர்கள்
அயனடி வீழ்ந்தஃ துரைப்ப
இதுதனைக் கண்ட வேதனும் வருந்தி
இமையவர் தம்முடன் கூடி
பதமுயர்ந் திட்ட பாற்கடல் சென்று
பரம்பொருள் தன்னையே போற்றத்
பொதுவச அரிரி யாகிநுங் குறையைப்
போக்குவோம் போங்களென் றுரைத்தான். (௱)

வேதனும் அமர ரோடு விடைபெற்றுப் போன பின்பு
மாதவன் கருணை கொண்டு மாயமாம் புருடன் தன்னைப்
போதவே விருட்டி செய்து புத்தொடு சமண மென்னும்
தீதுறும் சமயந்தம்மைச் செம்மையா யுபதே சிப்பான். (௱௧)

அரக்கர்க ளான முப்புரா தியர்கள்
அகிலமெங் கணும்நிறை வாகி
உரைக்கொணுக்கொடுமை செய்கிறு ரவரை
ஒழிப்பவ னுருத்திர னுகும்
சிறக்கவே யறனைப் பூசனை செய்து
சிவசம யத்தினிற் சேர்ந்து
இருக்கிறுர் அவரை முக்கணன் தனக்கே
எதிரிக ளாக்கிடு வாயே. (௱௨)

நின்னதோர் மாயா வல்லபத் தாலே
நீயிரு புருடனுய்ப் பிரிந்து
அன்னதில் நாமம் புத்தனு றென்றும்
அருகனு றென்றுமே தரித்து
முன்னமே சிலரைச் சமணர்க ளாக்கி
முறைகெட மற்றவர் பவுத்தம்
தன்னிலே மூழ்கிச் சைவமாம் சமயம்
தன்னையே பழித்திடச் செய்வாய் (௱௩)

அப்படிச் செய்வே னென்றே அம்மாயா புருடன் தானும்
செப்பமா யரியிடத்திற் செலவுபெற் றவனி யெய்தி
ஒப்பரும் மாயா சீடர் உண்டாக்கி நால்வரோடு
முப்புர மதிலோர் சாரல்முறைமையாச்சிரமம் கொண்டான் (௯௪)

சீடருடனே அங்கிருந்து விலங்கு பட்சி
செந்துக்கள் யாவையுமே சிருட்டி செய்து
நாடறிய அவைகளெல்லாம் மனிதர் போல
நடமாடி வார்த்தைசொல வுபதே சிப்பான்
மூடர்களாய் மனுக்களெல்லாம் கெட்டுப் போனர்
முத்தியடை வதற்கவர்க்கு வழியே யில்லை
தேடரிய நாமதனைக் கண்டு வந்தோம்
தீநெறியை விட்டுமுத்தி சேரு வீரே (௯௫)

வேதத்தின் மொழியீ தென்று வேள்வியிற் பசுமா னச்வம்
தீதுறக் கொன்று தின்றும் தீநெறி புகலு கின்ற
பாதகர் மொழிகேட் காமல் பதனமாய்ச் செவியை மூடிக்
கோதுறும் அழுக்குற் றுறும் குளிர்புன லாடல் நீக்கி (௯௬)

வெவ்விய திகிரி சூலம் வேல்வில்வாள் கரத்தி லேந்தி
எவ்வுயி ரும்ஒன் றென்னும் எண்ணமும் கொண்டி டாமல்
பவ்வமாம் கொலைகள் செய்யும் பாதகர் தேவர் மூவர்
செவ்வையாம் தெய்வ மென்று தெரிசித்து வணங்கிடாமல் (௯௭)

நீறினை யணிவோர் தம்மை நெடியதோர் அக்க மாலை
பாரினில் தரிப்போர் தம்மைப் பகிர்சடை முடியு ளாரை
கூறிடு மிவரையோர் தம்மைக் கூடிடா தகற்றிப் பின்னும்
மாறிலாப் பரம தர்ம மயிஞ்சையென் றதனில் நின்று. (௯௮)

தலைமயி ருதிர்ந்து போனால் தானதை உரியிற் கட்டிக்
குலையிலா மயிலின் பீலி குறிப்புடன் கரத்திற் றுங்கிக்
கலையகற் றியும்நிர் வாணக் காட்சியாம் வாம நூலை
நிலையென அடைந்தோ ருக்கு நித்திய மளிப்போ மென்றான். ()

இந்தநல் லதிசயத்தை இணையில்முப் புரத்தார் கண்டு
அந்தநற் புருடன் தன்னை அணுகிநீர் ஆரோ வென்ன
நிந்தையாற் கெடுஞ்சி வர்க்கு நித்திய மளிப்பதற்கு
வந்தனம் அருகன் நம்பேர் மறைமுடி வியாமே யென்ருன். (௱௰)

சீவர்கள் தமக்குத் தேவர்கள் தெய்வம்
தேவர்கள் தமக்கு மூவர்கள் தெய்வம்
மூவர்கள் தமக்கு முக்கணன் தெய்வம்
ஆவரென் றிருக்க அருகனீ யாரோ. (௱௰௧)

தன்னுயிர்போல் மன்னுயிரென் றெண்ணி டாமல்
தான்வதைக்கக் கரங்களிலா யுதங்க ளேந்திப்
புன்மொழியா லேமாற்றும் நூல்கள் செய்து
பூசனைக ளால்வயிறு வளர்ப்பா ரான
அன்னவரைத் தெய்வமெனச் சீவர் நம்பி
அருநரக மெய்துவதால் அதுதா ளாமல்
இன்னவுருக் கொண்டுவந்து வாம நூலை
இயம்பினேம் இதையடுத்தார் அடைந்தார் வீடே. ()

முன்னவனச் சிவனென்று நீங்கள் செய்யும்
முப்பூசை யனுதினமும் வாங்கித் தின்று
அன்னவனுங் களுக்கெல்லாம் புத்தி தப்பே
றளிக்கவகை யற்றவனுய் இருந்தா னென்றே
பின்னமில்லா வயிஞ்சைநெறி நம்பி டத்திற்
பெற்றுமே சிவாகமத்தை விடுவீ ராகில்
இன்னமதி யிரண்டினுள்ளே உங்க ளுக்கிங்
இணையில்லா மகப்பேற்றை எய்தச் செய்வோம். (௱௰௩)

என்றமொழி கேட்டவுணர் அனைவோர் தாமும்
இதுநிசமென் றோர்ந்தவர்தம் கரத்தி ருந்த
குன்றாத இட்டலிங்கந் தன்னை யெல்லாம்
குறைகடலில் எறிந்தருகன் தன்பா லெய்தி

இன்றேனும் மதமடைந்தோம் எங்க ளுக்கிங்
கினியவுப தேசமதை யியம்பிப் பின்பு
பொன்றாத நல்வாழ்வும் புத்ரப் பேறும்
போகபாக் கியங்கொடுத்துப் புரப்பீர் என்றார். (௱௰௪)

அவ்விதமவ் வவுணருக்கும் பத்னி மார்க்கும்
அயிஞ்சையெனும் சமணமதை யுபதேசித்துத்
திவ்வியமாம் வித்தொன்று சிருட்டி செய்து
திறமுடனே அவர்களிடங் கொடுத்து நீங்கள்
பவ்வமிலாப் பஞ்சானு விரத மாகிப்
பத்தியுடன் நமைப்போற்றி வாத்யத் தோடு
செவ்வையுடன் அனைவோரும் ஒன்று சேர்ந்து
சிறந்தவித்தை நடிலன்றே மரம தாமே (௱௰௫)

அம்மரந்தான் மரங்களுக்கு மேலா மாற்றால்
அரசமரம் எனஅதற்குப் பேர தாகும்
செம்மையுடன் அதையோர்மண் டலந்தான் பெண்டிர்
சிறப்புறுபூ சனைசெய்து வலம்வந் தேத்தி
நம்மைநினைந் தம்மணமாய் இருகை யாலும்
நயம்பெறமார் புறவதனைத் தழுவி வந்தால்
இம்மையிலே ஐம்பானுள் அனைவ ருக்கும்
இணையில்லாப் புத்திரப்பே றெய்துந் தானே (௱௰௬)

அம்மக வோடு நீங்கள் ஆனந்த மாக வாழ்ந்து
செம்மையாம் வாம நூலைத் திரிபறக் கற்றுணர்ந்து
பொய்ம்மையாம் சமயம் யாவும் புறந்தள்ளிச் சுத்த மாகி
நம்மைநா டொறும்பூ சித்து நலமுடன் வாழ்கு வீரே (௱௰௭)

நினைத்தபோ துங்க ளுக்கு
நேரினிற் காட்சி யாகி
மனக்குறை தவிர்த்தாள் வோம்போய்
வாருங்க ளெனவுரைத்து

அனைத்தினோர் பார்த்திருக்க
அந்தரத் தான மானான்
கனத்திடு மவன்போ லங்கோர்
கற்சிலை தோன்றிற் றன்றே (ககஅ)

அந்தநற் சிலையைக் கண்டே
அருந்தெய்வ மிதுதா னென்று
முந்திய விதையைப் பெண்டிர்
மூலமாய் நட்டு வைத்து
சிந்தையி லருக னாரைத்
தியானித்துப் பார்த்திருக்க
விந்தையா யன்னான் ராச
விருட்ச மாய் வளர்ந்தா னன்றே (கக௯)

அன்றுமுதல் மகளிரெல்லாம் வலமாய் வந்து
அணையும்போ தம்மரத்தில் மாய மாகி
நின்றருக னவர்களது கற்பைப் போக்கி
நிகரில்லா இன்பமுடன் போகந் துய்த்தான்
குன்றுநிகர் தோளுடைய புருட ரெல்லாம்
கோவில்பசும் பொன்னாலே செய்தார் நாள்கள்
ஒன்றுடனா றெட்டாக மாயா புத்ரர்
உதித்தனர்கள் அனைவருக்கும் மறுநாள்தானே (௱உ௰)

அம்மாயா புத்திரரைக் கண்டெல் லோரும்
அம்மதத்தில் ஊக்கமுடன் அணைந்து நின்றார்
பொம்மெனவவ் வருகனுந்தன் மாயை யாலே
புத்தனெனும் பெயர்தரித்துப் பூதலத்தில்
தம்மாலே சௌகதநூல் ஏற்படுத்திச்
சவுத்திராந் திகத்தொடுவை பாடிகங்கள்
நன்மாத்திய மிகம்யோகா சார மென்ன
நாலுசாத் திரமாக நவின்றிட் டானால் (௱உக)

தாரணியில் விண்ணாதி பூத மைந்தாய்த்
தத்துவங்க ளிருபத்து மூன்றும்அங்கு
வேரணியில் பிரபஞ்சஞ் சணிக மாத்ரம்
விளக்கொளிபோல் இருக்குமென விளம்பா நிற்கும்
தோரணையாற் புத்தியே ஆன்மா வென்றும்
தொகுத்தரச மரத்தைமகா போதி என்றும்
நேரிணையாய்ச் சொல்லி வந்தா னம்மதத்தில்
நின்றுவெகு பேர்சைவம் நீக்கினரே (௱உஉ)

சைவமதை விட்டவுணர் சமணமொடு புத்தமதைச்
சார்ந்த செய்தி
தெய்வமுனி நாரதனார் அமரரிட முரைத்ததன்மேற்
சிவன்பா லெய்தி
ஐயவிது சங்கதியென் லறிக்கையிடும் சமையத்தில்
அமர ரெல்லாம்
கைதலைமேற் குவித்தெங்கள் குறைதீரென் றங்குவந்து
கதறி னரே (௧உ௩)

அமரர்கள் முறையி டக்கேட்
டரனுமுப் புரத்தா ரோடு
சமர்புரிந் தவுணர் தம்மைச்
சங்காரஞ் செய்யச் செய்ய
அமிர்தமாங் குளத்தால் மாண்டோர்
அனைவரும் பிழைத்து வந்து
அமரது தொடுத்த லாலே
அவனுங்கை சலித்து நின்றான் (௱உ௪)

அந்தநற் சமரந் தன்னில்
அறியவற் கம்பு மாகிச்
சந்தமை பசுவா யன்னோர்
தந்திடு மமிர்த மிண்டு

நந்தியாய்த் தோன்றி ருத்ரன்
நகைத்திடச் செய்தவ் வாக்கில்
செந்தழ லாகி யந்தத்
திரிபுர மெரித்தா னன்றே (௱௨௫)

## சார்வாகமத உற்பத்தி.

இத்துட னிதுவும் நிற்க
இந்திரன் முன்னோர் காலம்
அத்வைதந் தன்னை நம்பி
அம்மதந் தன்னைச் சார்ந்து
ஒத்ததோர் கர்மம் யாவும்
உதாசீன மாகத் தள்ளிப்
பித்தன்போல் மயங்கித் தேவ
போகமும் பிழைத்திட் டானே (கஉ௬)

அக்கால மமர ரெல்லாம் அவரவர் மனப்போக் காகித்
தக்கதோர் நெறியில் லாமல் தடுமாறி யிருந்த தாலே
மிக்கதோ ருலக மெல்லாம் வெயில்மழை காற்று மின்றி
வக்கரித் ததனு லிந்த மாநிலம் பாழே யாக (கஉ௭)

அன்றிக் கோல மறிந்து சுரகுரு
வென்றி சேர்மக வானிடம் மேவிட
என்றும் போல் வந்தனமுறை யின்றியே
ஒன்றும் பேசிடா தூமைபோ லுற்றனன் (கஉ௮)

அவ்வி தங்குரு கண்டம ரேசனைப்
பவ்வ மற்றவுன் பத்தியும் பத்தியும்
செவ்வையும் மற்றித் தீவினை மற்றுனை
எவ்வித முற்ற தென்ன இயம்புவான் (கஉ௯)

இருவி னைக்குமீ டாகவிச் சன்மமும்
பெருகு முத்தி பெறுவதற் கில்லையால்

ஒருவினையும் செயாதவுண்மைப்பொருள்
பெரியா தாகும் பிரமம்நா மல்லவோ (கூ௰)

அம்முறை தன்னிற சீடன்
ஆசான்றன் நிலையே யாவன்
இம்முறை தனில்மகிழ்ச்சி
யெய்திடு மென்னை யென்று
தெம்முறை கொண்டிகழ்ந்த
தென்றஇந்திரனை நோக்கி
அம்முறை தன்னை ஆசான்
ஆங்கவற் கரைய லானன் (கூக)

பத்தி யோகம் யாகம் நோன்பு
பகரு கின்ற தர்மமோ
டத்து வைதம் யாவும் அத்தம்
மற்ற பேர்க ளறிவினல்
புத்தி யற்ற செல்வ ருக்குப்
போதஞ் செய்து பொருள்கொள
வைத்த வன்றி மெய்யுரை
மருந்தி னுக்கு மில்லையே (கூஉ)

இவ்வி தங்க ளாக நூல்கள்
ஏற்ப டாமற் போயினல்
செவ்வை யற்றிவ் வுலகமும்
திறமிலோர் பொருள்களைக்
கவ்வு வார்கள் வலியவர்
கவிஞ ரேழை யெளியவர்
எவ்விதத் திலும்பிழைக்க
ஏது வின்றி மாய்வரே (கூங)

ஆத லாலிவ் வுலகி லுண்மை
யான வேதம் மறையென

ஓது நாம முற்ற தாலும்
ஒருவரும் உரைத்திடார்
காத லான சீட னென்று
கருணையா லுனக்கு நான்
தீதகன்ற வுண்மை நூலைச்
செப்பு கேனென் றோதினன் (கரு௪)

தத்து வங்கள் பூதம் நான்கு
தாம லாது வேறிலை
அர்த்த காம மென்ப வன்றி
ஆன்ம லாபம் வேறிலை
குற்ற மற்ற தேக மன்றிக்
கூறு மான்மா வேறிலை
முத்தி தானும் மரண மன்றி
மோக்க மென்ப தில்லையே (கரு௫)

இறப்பார் வந்து மறுபடியும்
இந்த வுலகில் வினையுண்ணப்
பிறப்பா ரென்ற பேச்சலாது
பின்னு மவரைக் கண்டவரார்
விருப்பாம் மனைவி மக்கள்சுகம்
வேண பொருள்கள் தமைவிட்டு
மரிப்பார் பின்பு முத்தி யினில்
மன்னு மின்பங் கண்டவரார் (கரு௬)

தத்து வங்கள் பலவென்றும்
சதிரான்மா தனிவே றென்றும்
பித்தர் மொழியல் லாதுடலைப்
பிளந்து மதனைக் கண்டவரார்
பக்தி செய்தோர் தெய்வ மதைப்
பகலு மிரவும் துதிசெய்தோர்
செத்து மடியா துலகதனில்
திரமோ டென்று மிருந்தாரோ (கரு௭)

இள முலை மாத ரனுபவமுற்
றின்ப முடனே வாழாமல்
தளர்வுற விரதம் தானுற்று
சட்ருசியன்ன முண்ணுமல்
வளமறு கனிகாய் கிழங்குண்டு
வாடிய பேர்பே ரின்பமதில்
உளரெனச் சொல்லுவ தல்லாமல்
உவர்தமைக் கண்டவ ருளர்கொல்லோ (ராங-அ)

தன்கைப் பொருளை வீணுகத்
தருமந் தானம் யாக மென
அன்னியருக்கே யீந்திட்டோர்
அதனுற் கற்ப காலம்வரை
உன்னதஞ்சேர் பதவியதில்
ஒழியாச் செல்வம் பெறுவரெனச்
சொன்ன நூல்க ளல்லாமற்
சுயமாய்க் கண்டா ருண்டோசொல் (கங-கூ)

பாரு ளோர்தமர் மாண்ட நாளினிற்
பத்தி யோடுப வாசமாய்
நேரு டன்பிறர்க் கன்ன மிட்டிடில்
நேற்றிறந்தவர் பசியது
திரு மென்னிலோ ரூர்க்குச் சென்றவன்
திரும்பி வருகிற வரையிலும்
ஊரி லொருவனுக் கிட்ட சோறவன்
உண்ணுவா னெனி லொக்குமே (கசய)

சாதி மேலிது தாழ்வி தென்றுமே
சாற்று கின்றநூல் மெய்யெனில்
கோதி லாதவா னுலகில் நின்றுமே
குதித்த வோவுயர் சாதிகள்

நீதி லாதவ ருருவம் வேறதோ
திரைநரைமூப் பற்றவோ
பேதி யாதவான் பெண்ணெனப்படு
பேத மன்றிவே றில்லையே (௱௪௧)

தம்ம வன்றிப் பிறர்பொரு ளொடுபர
தாரமா மிதைக் கவ்வுவோர்
வெம்மை யாம்நர கழுந்து வாரென
விளம்பு வார்முழு மூடர்கள்
நம்மு டைப்பொருள் தார மீதென
நாட ரூபங்குறி யுள்ளவோ
செம்மை யற்றவர் பொருளும் தாரமும்
தீர முற்றவர்ச் சேருமே (௱௪௨)

இப்படிக் குரைசெய் கின்ற பாடண்ட
விஞ்சை யென்றிடு நூலினைச்
செப்பிடாரிது வேத ரகசியம்என்று
திறமுளோரொருவரும்
ஒப்பிலாஇதன் சார முண்டதே
உறுதி கண்டதே காட்சியாம்
தப்பிலாதவிச் சாரு வாகமதம்
தன்னைச் சார்ந்துநீ வாழ்குவாய் (௱௪௩)

இம்மாதிரிப் பிருகற்பதி யிந்திரன்றனக் கன்னாள்
தம்மாலுரை செய்ய மற்றவன் சாரு வாகனு மாயினன்
பின்மால் பொதி சமய மீது பிரபலமாயின வென்று
நம்மாலுரை செய்தவாறு சமய மிங்கிவை யாகுமே (௱௪௪)

இன்னும் பலசமயம் இவ்வாறே ஆயினவாம்
பின்னம் மதங்களுக்குப் பேரேதெனிற் சொல்லாம்
மின்னுசாங் கியம் யோகம்மீமாங் கிசைமேன்மை
துன்னும்சாத் மீகமொடு தொல்தர்க்கம் லௌகீகம் (௱௪௫)

மத்வமொடு காபாலிகம் மாந்திர சமிஞ்ஞா
சித்தாந்தநற் பாதஞ்சலி வைசேடிக நீதி
எத்தாகிய பாசுபதம் கௌளம்யா மளமும்
குற்றமுறுங் கிறித்துமதம் கோரி துலுக்காமே (கசசு)

சார்வாக மேக தேசி சார்ந்திடும் இரண்ய கற்பம்
ஆர்வமா விரத மின்னும் அநேகமாம் சமய முண்டு
கோவையா மிவற்றின் சாரங் கூறிடில் விரிவே யாகும்
நேர்பெறு பெருமா னன்பு நேர்ந்திடிற் கூறு வோமால் (கசஎ)

இன்னமும் வைண வத்தின் இணையிலாப் பெருமை கூறிப்
பின்னுள சமயந் தம்மின் பிழைகளை யெடுத்துக் காட்டி
பன்னிய வைண வத்தின் பரத்துவ நிலையைக் காட்டி
மின்னிடத் துலக்க மாக விளம்பிட நினைத்திட் டோமால் (கசஅ)

அத்வைதந் தன்னை யிரணிய னடைந்தே
அதோகதி யாயினன் மாலாற்
பித்தனுர் நெறியை ராவணன் வாணன்
பெரியதென் றெண்ணியே மாண்டார்
மற்றொரு சமணுல் தாருகா வனத்தோர்
மழுங்கினர் முப்புரா திகளும்
கொத்துட னழிந்தார் பவுத்தரு மொழிந்தார்
குலைந்தனர் சாருவா கருமே (கசகூ)

வேதமே யொலிக்கும் வைணவந் தன்னில்
விபூடணன் மாபலி யனுமான்
கீதயாழ் வல்லோன் பிரகாலா தாழ்வான்
கசேந்திரன் துருவன்வால் மீகி
வேதன்நல் ருத்ரன் அமரர்கோன் முனிவர்
விண்ணவர் குழாங்கள்யா வற்றும்
ஆதிமா லுடனே யூழிதோ றூழி
அவதரித் தவன்பதம் அடைவார் (கருய)

இவ்வித மாகப் பலபல சமயம்
எழுந்துமே லுற்றது காணச்
செவ்வையாம் வேத சாத்திரம் யாவும்
சிதறியே மறைந்தன பின்னும்
வெவ்வினை கடந்த பராசரன் புதல்வன்
வியாதனும் தோன்றியிவ் வுலகில்
திவ்விய மறையும் வைணவந் தனையும்
திறமுடன் வகுத்தனன் மாதோ (கருக)

மட்டி லாத துவாபர மாம்யுகம்
எட்டிலக்கமோ டேழொன்ப தாயிரம்
திட்ட மாயொரு பன்னிரு பத்தினில்
நிட்டை யோங்கும் வியாதனும் தோன்றினன் (கருஉ)

இம்முனி வந்த நாள்முத லாக
எழுநூற்றின் மேலெண்பத் தைந்தில்
செம்மையாங் கண்ண பிரானிங்குத் தோன்றித்
திகழுமாண் டறுபதோ டாறில்
நன்மையே பெருகப் பற்குனன் தேரில்
நயமுள கீதையை மொழிந்தான்
அம்மறை தானும் உலகினிற் பரவி
அருமையா யிருந்ததக் காலே (கருந)

ஆதி வைணவம் பின்னும் ஓங்கிட
ஆழ்வா ராதிகள் தோன்றியே
வேதந் தம்மைத் தமிழிற் செய்து
விரித்த னர்பிர பந்தமாய்
வாத வூரராருயீச ஞர்திரு
வாச கம்மொன் றியற்றினர்
சோதி யாயெழுந் திருமதங்களும்
துலங்கி நின்றதக் காலமே (கருச)

பின்பு புத்தமொடு சமண மெங்கனும்
பிரப லித்திட ருத்திரன்
அன்புடன்சங்க ராரி யன்னன
அவதரித்ததை யழித்தபின்
இன்புடன் அத்து வீதமும்சிவ
பத்திதன்னையும் இயம்பினன்
வன்புகொள் கலிமூ வாயிரத்தெழு
நூறெனப்படும் ஆண்டிலே (கருரு)

சங்கராச் சாரியராற் சைவாத் வைதம்
தகைபெற வைணவந் தளர
பங்கமில் கலிசகம் நான்குமோர் நூறுடன்
பதினுறும் கூடிய ஆண்டில்
மங்கள மாகரா மாநுஜ முனியிம்
மானிலம் தன்னிலே தோன்றி
எங்கணும் பரவி வைதிகந் தழைக்க
இருமூன்று சமயமும் வென்றார். (கருசு)

சடகோபர் முதலானார் கலிகன்றி நடுவானார்
நடையோங்கு மாண்டாளும் கடையாகி நலம்பெற்றாள்
திடமாக நாதமுனி முதலானார் உடையவரும்
நடுவானார் மணவாள மாமுனிவர் கடைநின்றார் (கருஎ)

இவ்விதமாய் வைதிகமிங் கெழுவதுவும்
விழுவதுமாய்
அவ்விதமே சிவநெறியும்
அடும்போர் புரிந்தனவாம்
பவ்வமுறும் துலுக்குமதம்
பரவியதன் பின்னுகச்
செவ்வையற இவ்வுலகில்
தீமைமிகச் செய்ததுவே (கருஅ)

இக்கொடிய துருக்கமதம் கலிகாலா யிரத்திருநூற்
றெழுபத்தாரில்
மிக்கநெடு மரசுபெற்றுச் செய்துவந்த கொடுமையினல்
மேன்மை தாழ்ந்து
சிக்கெனவே ஐநூற்றெண் பத்திரண்டா மாண்டதனில்
தேசம் விட்டுப்
பக்கபல மில்லாமல் வெள்ளையர்கள் அரசதனைப்
பறித்திட் டாரே (கருக)

வெள்ளையர் கலிநான்கெட் டேழிரண்டில்
மேதினி பெற்றன ரவரை
எள்ளினுஞ் சிறிய கிறித்தவ மதந்தான்
இணங்கியே அதுமுதலாக
மெள்ளவே தங்கள் மதமதைச் சிறிது
விளக்கியே வருகிறு ரின்றும்
கள்ளமா மதங்கள் பலஎழுந் தாலும்
கருகுமோ வைணவ மதந்தான் (கசுய)

கடந்தவா னதனில் அழியாமல் நிற்கும்
கருநீல மேகமாம் வர்ணம்
தொடர்ந்ததன் கீழே அநேகவர் ணங்கள்
தோன்றியே மறைந்திடு மதுபோல்
அடர்ந்திடுங் கரிய மேனிய னென்றும்
அழிவிலா நித்திய மாகும்
நடந்திடும் மற்றத் தெய்வங்கள் யாவும்
நசித்திடும் அநித்திய மாமே (கசுக)

ஆயினு மரசை அடைந்த கிறிஸ் தவமும்
அத்வைத பாடண்டந் தானும்
தீயினுங் கொடியவோ காயத மதமும்
சேர்ந்துமே கலிமகத் துவத்தால்

வேயினி லுதித்த தீயது போல
விளங்கியே எரியுதிக் காலம்
தாயினு மினிய வைணவ மதமும்
சைவமும் ஒருபுறம் தயங்க (கசுஉ)

சாதியின் முறைமை தவிர்தலு மொன்று
சமயவா சாரம் குறைதலு மொன்று
வேதியர் வேதம் துறத்தலு மொன்று
வேந்தனின் பாடை விருப்புத லொன்று
பேதையர் பெண்கள் உயர்தலு மொன்று
பெருமையாங் கற்பும் அழிதலு மொன்று
ஓதிடும் வேதம் மறைதலு மொன்லு
உத்திசாத் திரங்கள் ஒலிப்பது மொன்றே (கசுங)

மனைவியர் பிறரைப் புணர்தலு மொன்று
மகிழ்நர் அறிந்தும் வாழ்குவ தொன்று
தனயருண் டுடுத்து வாழ்தலு மொன்று
தந்தையர் இரந்து தயங்குத லொன்று
மனையினில் மருகி மகிழ்தலு மொன்று
மாமிய ரவட்கு நடுங்குத லொன்று
அனைவரு மொருமை அகற்றுவ தொன்று
அநித்தியப் பொருளே அதிகமா மொன்றே (கசுச)

பொருளுள புலையன் பெண்ணைப்
பூசுரன் மணந்து வாழ்நாள்
இருளுறு மாதியந்தம்
இப்படிப் யிலைழத லாலே
மருளுறும் மத்தி யெல்லாம்
மயங்கியோர் சாதி யாகி
அருளறும் பொருளு ளோரை
அடைந்துபெண் கொடுத்தும் கொள்வார் (கசுரு)

கொடுமையிக் காலம் தன்னிற்
குருபரம் பரையில் வந்தோர்
கடுமையாம் நீச பாடை
கற்றுவை திகங்கை விட்டு
இடும்பையா லுத்யோ கத்தில்
இல்லாத வநீதம் செய்து
கடுஞ்சொலா ராகி வாழ்ந்து
கடைநிலை யடைவர் தாமே (கசுசு)

நீசபா டையினில் மேன்மை
நீங்கின பேரிற் சில்லோர்
தேசத்திற் சிட வர்க்கம்
தேடியே குருக்க ளாகிக்
காசினுக் குபதே சித்துக்
கைங்கர்ய மில்லா ராகி
மாசற வுண்டுடுத்து மைந்தரு மின்றி மாய்வார் (கசுஎ)

ஆலயம் மடங்கள் இவைகளிற் பட்டம்
அணிந்துமே குருக்களா யுள்ளோர்
சாலவே செல்வங் கிடைத்துமே யிருந்தும்
தாங்களுந் தாம்பரி சனமும்
மேலதாம் பெருமை கௌரவத் தோடு
விளங்குவா ரன்றிமே தினியிற்
சீலமா மடங்கள் எங்குமேற் படுத்திச்
சீதரன் பெருமையை விளக்கார் (கசுஅ)

இவ்வகை யோரிற் சிலவர்சாத் விகராய்
இசைந்ததம் தொழிலினில் நெறியாய்ச்
செவ்வையாஞ் சொரூப கைங்கரி யங்கள்
செகமெங்குஞ் சென்றுசென் றியற்றி
எவ்வகை யாலுஞ் சீவரைத் திருத்தி
எங்கணும் பெரும்பெய ரெடுத்துப்

பவ்வமற் றவராய் எம்பெரு மானார்
பதமடைந் திடுகுவர் தாமே (கசுகூ)

இத்துட னிதுவும் நிற்க
எதிரிடும் சைவ நூலின்
குற்றங்கள் யாவை யென்னிற்
குதிருட்டி யெண்ணி யெண்ணித்
தத்துவம் பலவே காட்டித்
தானதின் மேலும் மேலும்
சுத்தசூ னியமே கண்டு
சோர்ந்ததிற் கிடப்ப தாமே (களய)

மணமுள மணிமண் மண்ணும்
மாதவ னடியார் தாமும்
குணமுடன் மேல்நோக் காகக்
குறிப்புடன் தரித்து நிற்க
இணையிலாச் சத்து நீங்கி
எரிந்திட்ட சாம்பல் தன்னைப்
புணையறுஞ் சமநோக் காகப்
பூசுவ தறிந்திடீரே (களக)

இவ்வுடலிற் பிர்மாம்சம் வெண்மை யான
என்புருவாம் அதன்குறியே திரும ணாகும்
திவ்வியமாம் சத்தாம்சம் உதிரமா மிசமாகச்
செகப்புநிறம் அதன்குறியே மணிமண் ணாகும்
செவ்வையா மிதின்சார மறிந்திடாமல்
திருவில்லாப் பற்பமதைப் பூசிக் கொள்வார்
இவ்விதமாம் சாம்ப லுக்கிங் கேற்ற மாக
இல்லாத நூல்கள்மிக வியம்பி னாரே (களஉ)

அண்டொணுச் சோதிச் சுதர்சன மலையை
அருணையா மலையிது வென்றும்

எண்டிசை யளந்தோன் வேணுகோ பாலன்
என்பதண் ணுமலை யென்றும்
பண்டொரு காலரு ணுசல புராணம்
பாடிவைத் தனர்களச் சைவர்
தொண்டர்காள் வராக புராணத்தி லறிவீர்
சுதர்சன மலைவர லாறே (கஎ௩)

விடமது ரையிலே கண்ணனுய்ப் பிறந்து
மாயமாந் திருவிளை யாடல்
அடைவுடன் நடத்திப் பாரத முடித்த
அற்புதச செய்கையி னீடாய்
நடம்புரி சிவனூர் தென்மது ரையிலே
நடித்ததாய்த் திருவிளை யாடல்
திடமுள புராணம் சைவர்கள் செய்த
திறமையும் சொல்லுதற் கரிதே (கஎச)

காளியன் முடிமேல் நடித்தவன் மமதை
கழன்றுமே கடலினிற் செல்ல
மீளவே விடுத்த காதையின் பதிலாய்
மிருந்திடச் சைவர்கள் சிவனூர்
காளியோ டாடித் துரத்தின னென்னும்
கருத்தையும் கோவிந்த ராசன்
நாளநாபன்றன் பெயரினுக் கீடாய்
நடராச னென்னவுஞ் செய்தார் (கஎரு)

சேதுவி லிராம னிலிங்கமே பூசை
செய்தன னென்றுமே சைவர்
கோதிலா ராமர் யணத்தினி லில்லாக்
கொள்கையைக் கூறினுர் பொய்யே
பாதகர், சிவனூர் சார்த்தூல மென்னும்
பறவையாய் நரசிங்க வுருவாம்
நாதனைப் பிளந்த தென்றுமே நூல்கள்
நவின்றதும் பொய்யது வாமே (கஎசு)

சங்கரன் தூரு வாசன்
சாவிலா வனுமா னோடு
அங்கதன் நீலன் வாத
வூரனோ டத்வை தங்கொள்
சங்கராச் சார்ய ரென்று தானுமே
யனேக சன்மம்
பயங்கமாய்ப் பிறந்திறந்தோன்
பவமிலி என்ப தாமோ (கஎஎ)

திருத்துழாய்த் தண்டும் தாமரை மணியும்
திருமகள் பிறப்பிட மதனல்
தரித்திடிற் காயம் செய்திடும் வினைகள்
தாமனற் பஞ்சென வெரியும்
கருத்தினு லதனை வைணு ரெல்லாம்
கனமுடன் தரித்தன ரதனை
மறுத்து ருத்ராக்க மணியுடன் எலும்பும்
மாலையாய்த் தரிப்பது வாமே (கஎஅ)

என்புருத் ராக்க மாலையே தரிக்க
இசைந்தோர் நூல்களைச் செய்தும்
இன்பமா முலகம் அசுத்தமா மெலும்பை
ஏற்றிடாத் தன்மையால் நீக்கி
அன்புடன் செய்த சாத்திர மொன்றும்
ஆச்ரமம் ஒன்றுமாய் நின்றார்
என்பினைத் தரித்தோர் கபாலிக மதமாய்
எங்கணு மிகழ்ந்திடத் திரிவார் (கஎகூ)

செத்ததோர் பிணத்தைக் கொண்டு
தீயினி லெரித்து விட்டுச்
சுத்தமாம் நீற தாக்கிச்
சுடலையை விட்டு வந்து

நித்யானுட் டானத் தோடு
நீரினில் மூழ்கிச் செல்லல்
உத்தமர் நீதி யென்றே
ஓதும்வை திகநூல் தாமே (கஅய)

அநித்திய வுடலம் மாண்டபின் அதனை
அக்கினிக் கிரைகொடுக் காமற்
செனித்திடும் பூமி தன்னையே அசுத்தஞ்
செய்துமே குழியினிற் புதைத்துத்
தனித்திட அதன்மே லிலிங்கமு மமைத்துச்
சங்கரன் கோவிலே கட்டி
மனத்தினுக் கிசைந்தச் சுடலையில் வாழ்ந்து
வைதிகம் யாவையும் கெடுத்தார் (கஅக)

மலத்தினில் வாழும் புழுவினைப் போல
மயானத்திற் கோவிலே கட்டிக்
குலத்தினிற் ருழ்ந்த விப்பிரர் தாமும்
குருக்களாய்ப் பூசைக்கு நேர்ந்தார்
நிலத்தினி லெங்கு௩் சிவதல மாக்கி
நிகரிலா மேன்மையும் பெற்றுப்
பலத்துடன் பூணூல் சிகைதரித் திருக்கப்
பத்தர்கள் முண்டமாய்த் திரிவார் (கஅஉ)

இன்னமுஞ் சொல்லில் விரிவதா மென்றே
இத்துடன் நிறுத்தினேம் சிவனார்
சின்னது வான தமோகுணத் தவனுய்த்
திகம்பர னுகியே திரிந்து
கன்னிய கஞ்சாக் குடியினுல் மயங்கிக்
கண்சிவந் தூக்ரமாய் மயானம்
தன்னிலே கணங்கள் தன்னுட னுடிச்
சந்தோஷ மாகவீற் றிருப்பன் (கஅந)

காமியாய்ப் பின்னும் பார்வதி யோடு
கானகந் தன்னிலே யிருந்து
தாமிகு போகம் துய்த்தன னதுவும்
தவிரமுன் மாதவன் கொண்ட
மாமிகு வடிவி னுயர்ந்தமோ கினிமேல்
மாளாத விரகமே கொண்டு
பூமியி லெங்குஞ் சுக்கில மொழுக்கிப்
புலம்பியே திரிந்தன னன்றே (கஅச)

கற்பினில் மிகுத்த கிருபியின் கருத்தைக்
கண்டறிந் திடவிருந் தாகி
அற்பாம் மதியால் நிருவாண மாக
அவளையே வரும்படி செய்து
விற்பன மற்றே அன்னவள் மீது
விரகமாய் விந்துவை யிலையில்
அற்புத மான தளிகையில் விடுத்தே
அக்கணம் மறைந்தன னன்றே (கஅரு)

சுந்தர மூர்த்தி பரவைநாச் சியரைச்
சோர்விலாப் போகங்கள் துய்த்தே
அந்தற் கோலத் தோடிரு வரையும்
ஆலயந் தனில்வரச் செய்து
வந்தபின் னவரை விரன்மீண்ட கண்டன்
வாட்டியே துரத்து மக்காலைச்
சொந்தமா யவரைக் கோவிலுள் ளிழுத்த
சோதனை யெண்ணினா லழகே (கஅசு)

பெண்சாதி தன்சொற் கேட்டுப்
பிதாவான பிரமன் தன்னை
அஞ்சாமற் தலையறுத்தே
அவதியும் பட்டா னன்றே

மிஞ்சியமதன்பா ணத்தால்
விரகநோ யதிக மாகி
வஞ்சியாம் பார்வதிக்கா
வாக்கொடு தவமும் பொய்த்தான் (கஅஎ)

தாருகா வனத்தில் இருடியர் மனைவி
தங்களைக் கற்பழித்திடவும்
பாரில்வள் ளாள பார்த்திவன் தன்னைப்
பரிட்சையே செய்திடும் போதும்
நேருட னத்ரிமாமுனி மனைவி
நெறியினைக் கண்டகா லத்தும்
சீரியர் செய்யாக் காமிகள் செய்யும்
செய்கையை யுணர்ந்திடு வீரே (கஅஅ)

இங்கிதைச் சுருக்க மாக
இயம்பினே மிதின்மே லாகச்
சங்கையாம் அத்வை தத்தின்
தவறுகள் சிலவுரைப்போம்
எங்கணும் பிரமந் தானும்
எதுவும்வே றில்லை என்றால்
புங்கமா முத்தி யில்லை
பிறபிறப் பதுவுங் காணோம் (கஅகூ)

போதமாம் ஞான மோதும்
புகழ்குரு தானு மாரோ
சாதன சதுட்ட யங்கள்
தாமது செய்வா ராரோ
காதல்நிர் விகற்பத் தியானம்
கருதுவா ராரோ காணோம்
வேதமுங் காணோம் யாவும்
விருத்தமாய்ப் போகுந் தானே (ககூ0)

எழுவகைப் பிறப்புங் காணோம்
ஏற்றமும் தாழ்வும் காணோம்
அழிவதும் காணோம் மேலே
ஆவது மொன்று மில்லை
ஒழிவற வுணர்ந்த ஞானி
உயர்ந்திடும் பிரம மானல்
இழியு மஞ்ஞானி தன்னை
யாவனென் றுரைக்க லாமோ (கசுக)

அஞ்ஞானி கரும மென்றும்
மெய்ஞ்ஞானி பிரம மென்றும்
துஞ்சாமற் சொல்வோ மாகில்
துவிதமாய் முடியு மன்றோ
மிஞ்சிய பிரமச் சாயல்
மேதினி யாகு மென்றால்
தஞ்சமா மரூபந் தன்னில்
சாயையெவ் விதமுண் டாமோ (கசுஉ)

காந்தத்தி னெதிரே யூசி
கம்பித்த வாறு மென்றாற்
காந்தமொன் றூசி யொன்று
கர்த்தவ்ய மிரண்டா காதோ
பாந்தளென் றையங் கெகள்ளும்
பழுதையொன் றிருக்கு மன்றோ
ஆழ்ந்தவஞ் ஞானி பிர்மம்
ஆகாம லென்ன வானன் (கசுங)

தானுமே பிரம மானல்
தவந்தானந் தாங்கு வானேன்
ஈனமா மிந்த்ரி யங்கள்
எங்ஙனம் புசித்தா லென்ன

தியானமே புரிவான் யாவன்
சீவன்முத் தனுமே யாவன்
ஞானமே யில்லான் யாவன்
நரகமே அடைந்தார் யாரோ (கசுச)

சங்கராச் சார்யர் தம்மைச்
சாதியிற் றள்ளி விட்ட
அங்கவர் கொடுமை யாலே
அத்வைதம் முதலிற் சொன்னார்
இங்கித முடனே பின்னர்
இயம்பினார் சிவாக மத்தைப்
புங்கமா மிவையிரண்டாற்
புத்திரரைவென்றார் மாதோ (கசுரு)

புத்தர்கள் காலந் தன்னிற்
பொருத்தமாம் மடங்கள் கட்டி
மெத்தவே தான தர்மம்
மேன்மையாய்ச் செய்து வந்தார்
அத்திரு மடத்தின் தர்மம்
அனைவர்க்கு மொக்கு மென்று
சித்தமாய்ச் சிவாக மத்திற்
சேர்த்தனர் திறமீ தாமே (கசுசு)

அம்மடந் தனில் இருந்தே
அறிவிலாச் சூத்ர ரெல்லாம்
மெய்ம்மைச்சன் யாசி போல
வேடமே தரித்துக் கொண்டு
பொய்ம்மையாம் அத்வை தத்தைப்
புகழ்ச்சியாய்ப் படித்துப் பார்த்தும்
அம்முறை தானும் விட்டே
ஆச்ரமக் கர்மி யானார் (கசுஎ)

புண்ணிய வசத்தி னாலே
பொறிபுலன் சேட்டை யற்றே
எண்ணருங் கடவு ளுக்கே
ஏற்றதோர் அடிமை யாகி
அண்ணலி னருளினாலே
அனைத்தையும் தியாகஞ் செய்யும்
தண்ணியர் நிலையை யன்றோ
சாற்றும்வே தாந்தம் யாவும் (கககூஅ)

வேதாந்தப் பொருளை யெல்லாம்
வியாக்யான பேத மாக்கித்
தீதான தமோகு ணத்தைச்
சேர்ந்தவ ருய்யுமாறு
சூதாகச் சைவாத் வைதம்
சொல்லினர் அரனார் முன்னாள்
வாதாடா தாய்ந்து பார்த்து
வைணவந் தனைச் சேர் வீரே (கககூகூ)

நாரணன் சமயங் கொஞ்சம்
நவிலுவோம் தத்து வங்கள்
காரணம் இருபா னான்கும்
கடந்ததன் மேலாய் நிற்கும்
பூரண வறிவு தானே
புகழுறும் பரம தாகும்
ஆரண மதற்கு நாமம்
அரியென மொழியும் தானே (உ௱)

ஆவதும் அழிவு மில்லை
ஆகாயம் அதற்கு ரூபம்
மேவரு ஞான னந்த
வெள்ளமாய்ச் சத்தாய் நிற்கும்

யாவுமே அதனுள் ளுண்டே
இல்லையென் றுரைக்க லாகா
தேய்வரும் சாத்வீ கந்தான்
செனித்தது அதனுள் நின்றே (உ௱க)

சாத்விக குணத்தி னாலே
தன்னுடை வல்ல பத்தால்
காத்திர ரூப மொன்று
கருதின போது தன்னுள்
சூத்ரமா யொடுங்கி நின்ற
சகமதாம் வாயு தோன்றிப்
பூத்தது வதனுட் சீவன்
பொருந்திய தேயு தானே (உ௱உ)

வெளியுடன் வாயு தேயு
விளங்கிடா தரூப மாகித்
தெளிவுறும் பரமுஞ் சீவ
செகமதாய் நிற்கும் பின்பு
ஒளியுறும் அப்பு தானும்
உருவமாய்த் தோன்றித் தன்னுள்
களியுடன் பூமி தோன்றிக்
கடினமா முருவ மாமே (உ௱௩)

அப்பெரும் பூமி தானும்
ஆயிரத் தெண்சிரங்கள்
ஒப்பிலாச் செவிகண் மூக்கோ
டுயர்கர மிரட்டிப் பாகிச்
செப்பரு முடல மொன்று
திருப்பத மிரண்டாய் நின்று
தப்பறும் பூதம் நான்கும்
தன்னுளாய் நின்ற தம்மா (உ௱௪)

ஓதரு மிதனை யாய்ந்தோர்
உலகமாம் விராட்டு வென்பர்
கோதறும் அரிதனக்குக்
கோவிலாய் அப்பு மேலே
தீதறு சேடன் தன்னைச்
சிருட்டித்துச் சயன மாக்கி
ஆதர வான ரூபம்
அடைந்துகண் வளர்ந்தா னன்றே (உரு)

அப்பான தானே நாரண னென்னும்
அருமையாம் நாமமே படைத்து
உற்பன மான வுலகமே படைக்க
உன்னியே யோகுசெய் காலை
விற்பன மாக வுந்தியில் கமலம்
விளங்கியே அப்புவின் மேலே
நிற்பது வாகிப் பிரமனும் அதன்மேல்
நேர்ந்தனன் ராசத குணத்தால் (உரசு)

பிரமனுந் தனையல் லாமல்
பிறிதொன்றுங் கண்டிடாமல்
வருமமாய் மயங்கி நிற்க
வானத்தி லிருந்தோர் வார்த்தை
மருமமாம் பிரண வந்தான்
வந்துமே யொலிக்கக் கேட்டு
நிருமல மாமோங் காரம்
நிட்டையிற் செபித்தான் மன்னே (உஎ)

அப்படி யநேக காலம்
ஆனபின் னவனிருந்த
செப்பமாம் பீடந் தன்னுள்
தெரிந்தன துளையநேகம்

ஒப்புற வதனுட் சென்றங்
குந்தியி லுலகம் சீவர்
செப்படி போலே கண்டு
சேர்ந்தனன் இருத யத்தில் (உ௭௮)

சீதரன் எனும் பேர் கொண்டு
சேடனைப் பீட மாக்கி
ஏதமில் பூமி நீளை
என்றதே வியர்க ளோடே
ஓதரு முடியா ரங்கே
யூரகுண் டலங்க ளோடும்
தீதறு மாயு தங்கள்
ஐந்தொடுஞ் சேவை தந்தான் (உ௭௯)

அயனுமப் பெருமான் கோலம்
அனைத்தையும் அகன்றி டாமல்
நயனங்கள் குளிர நோக்கி
நாதநீ யெனைப்படைத்த
உயர்கருத் தென்ன வென்றே
யொடுங்கிவாய் பொத்திக் கேட்கச்
சுயநல மொன்று மில்லான்
சோதிவாய் மலர்ந்து சொல்வான் (உ௮0)

என்னுடை யுந்தி தன்னில்
இருந்திடு முலகஞ் சீவர்
தன்னையுன் தானந் தன்னிற்
சமைத்திட வேண்டித் தானே
உன்னையுஞ் சிருட்டி செய்தோம்
ஓதுமந் திரங்கள் தம்மைப்
பன்னியே செபிப்பா யாகிற்
படைப்பது நடக்குந் தானே (உ௮௧)

நித்தியம் நாமே நம்முள்
நிறைந்திடும் வத்து வெல்லாம்
சத்தினு லாய்ந்து பார்த்துச்
சகஞ்சீவ ரென்றிண்டாச்
சித்தினுற் சிருட்டி செய்து
திருவிளை யாட லாக
மற்றதை யாட்டிக் காத்து
மகிழுமா னந்த மாவோம் (உ௧உ)

சத்தினிற் சத்துத் தானும்
தான்வெளி வாயு தேயுச்
சத்தினிற் சித்துத் தோன்றித்
தானது விராட்டே யாகும்
சத்தினில் ஆனந் தந்தான்
சந்தநா ரணனே யாகும்
சத்துசித் தானந் தத்தில்
தானுமுக் குணமுண் டாச்சே (உ௧௩)

அறிவதுவே பரமான்மா ஆகாயம் சீவான்மா
விரிவான வாயுமனம் வெளிச்சமதே அகங்காரம்
பரிவான நீர்சித்தம் பாரதுவே மதியாகும்
சரியான இவைஞான தத்துவங்க ளாந்தாமே (உ௧௪)

மெய்க்கொளவே யிவைபின்னும் மெய்வாய்கண் மூக்கு செவி
பக்குவமாம் வாக்குடனே பதம்பாணி பாயுவொடு
துக்கமுறு முபத்தமெனச் சொல்லியவிவ் வாறுகத்
தக்கதொரு முந்நான்கு தத்துவங்கள் ஆகிடுமே (உ௧௫)

சத்தமதே ஆகாயம் தனிவாயு பரிசமதாம்
உற்றதொரு தேயுவே உருவுடைய ரூபமதாம்
மற்றதொரு அப்புரசம் மண்ணதுவே கந்தமதாம்
தத்துவங்க ளாந்தினையும் சாற்றுவார் பொறியெனவே (உ௧௬)

பூதமது நீரெரிகால் வானும் மண்ணும்
பொறியைந்தும் ஞானதத் துவங்க ளென்பர்
ஏதமுறும் மெய்வாய்கண் செவிமூக் கென்ற
இந்திரியம் புலன்களென வியம்பு வார்கள்
பாதமொடு வாக்காதி பகர்ந்த வைந்தும்
பலமாங்கர் மேந்திரிய மெனப்ப கர்வார்
சாதகமா மனம்புத்தி சித்தாங் காரம்
தாமந்தக் கரணமெனச் சாற்று வாரே (உ௧௭)

பாதமோடு முழந்தாளுந் துடையிரண்டும்
பாங்கான அதலோகம் இடையே யொன்று
ஆதரவா முந்தியோ டுதரம் மார்பாம்
அவைமூன்று மூலோகமென அறைய லாகும்
ஓதரிய கண்டமொடு திருத்தோள் மூன்றும்
உயர்சிரமு மென்றிவற்றை யுற்றுப் பாரு
தீதறவே பதினாலு லோக மாகும்
சிருட்டியிந்த விதமாகச் செய்ய வேண்டும் (உ௧அ)

காலிலுள நாடிநரம் பெலும்பி னம்சங்
கருதியே நாகர்களைப் படைக்க வேண்டும்
மேலுள்ள விடையதிலே நீர்வாழ் செந்து
விளக்கமதா யுந்தியிலே மனித ராதி
சாலவே உதரமதில் மேகம் காலில்
தாரகைகள் முச்சுடர்கள் சமைக்க வேண்டும்
பாலகனே திருமார்பிற் சொர்க்க லோகம்
பாங்கான தேவர்களைப் படைப்ப தாமே (உ௧௯)

நின்றதிருக் கோலமதால் மனிதர் தேவர்
நிலையான தாவரங்கள் புற்பூண் டாக்கிச்
சென்றதிருச் சயனமெனுங் கோலந் தன்னால்
திரியக்காம் விலங்குமூதற் சீவ ராக்கி

என்றனது கோலத்தாற் பறவை யோடே
இனமான படர்கொடிக ளிவையுண் டாக்கி
உன்றனது திறமையினுற் படைப்பா யென்றே
உண்மையெலாம் விளங்கிடவே வுபதேசித்தான் ()

அப்பிரான் தானே பின்னும்
அக்கர ரூப மாக
ஒப்பிலா வேதம் நான்கும்
உதித்திடச் செய்து வேதன்
செப்பமாங் கரத்தி லீந்து
சிருட்டியு மிதனுற் செய்வாய்
அப்பனே போய்வா வென்றே
அனுப்பிடப் பதியைச் சார்ந்தான் (உஉக)

அந்தநற் பிரமன் தோன்றிடமான
அருமையாம் தாமரை மலரே
விந்தையாம் பூமண் டலமது வென்று
விரித்தனன் பதினலு லோகம்
பந்தமா யதனைக் கண்டவா னந்தப்
பரப்பினுல் தமோகுணத் தவனுய்
முந்தியே அவன்றன் நெற்றியி லிருந்து
முளைத்தனன் உருத்திர மூர்த்தி (உஉஉ)

உக்கிர ரூப மாக
வுருத்திர னேங்கி நிற்பப்
பக்குவ மாகத் தன்னுட்
பதினொரு ருத்ரர் தோன்றச்
சிக்கென வவருள் நின்றும்
செனித்தனர் பதினோர் கோடி
மிக்கதோர் கணங்கள் தாமும்
வீறுடன் விளக்க முற்றே (உஉங)

அன்னவர் பசியி னாலே
அயன்தன்னைப் பிடிங்கித் தின்ன
உன்னியே யுக்கிர மாக
ஓடிவந் தணுகும் போது
நன்னயப் பிரமன் தானும்
நடுங்கித்தன் னுருவ மாறிப்
பன்னரி தான மூடு
பனியுரு வாயி னானே (உ௨௪)

அந்தநற் சமயந் தன்னில்
அயனுஞ்சாத் துவிக மாகிப்
பந்தமாம் அரியைப் போற்றப்
பன்னீரா தித்த ராகச்
சுந்தரத் திருமால் தானும்
தோன்றியங் குருத்தி ரற்கு
வந்ததோர் பசியை யாற்றி
வரக்களும் மகிழ்ந்தளித்தான் (உ௨௫)

வேதன்முன் னுருவ முற்று
விளங்கியே யவிடம் நின்று
நாதனும் விண்டு தன்னை
நலமுடன் வணங்கி நிற்கக்
காதலா யெனைப்படைத்த
காரண மருளு கென்றே
ஓதிய சிவனு ருக்கிவ்
வுரையரி யுரைக்க லானார் (உ௨௬)

உனக்குவேண் டியதை யெல்லாம்
வுன்னுடைத் தந்தை யான
கணக்கிலா மேன்மை வேதன்
கழறநீ தேர்வா யென்று

மனக்குறை யிலாத தேவன்
　　மாயமாய் மறைந்தான் பின்பு
தனக்கொரு நிகரில் வேதன்
　　தனயனுக் குரைக்க லானன் (உஉஎ)

சீவர்கள் தமக்கு நீயே
　　தேவனய்த் திகழ்வை அன்னோர்
தீவினை தீர்ந்த பின்பு
　　தீரமாய்ச் சங்கரிக்க
ஆவலா யுன்னை நாமே
　　அமர்த்தின மினிமே லாக
மேவருஞ் சித்துத் தந்தோம்
　　விளங்கிநீ வாழ்வா யென்ருன் (உஉஅ)

பின்சனற் குமார ராதிப்
　　பெருமையோர் பிறந்தார் நால்வர்
உன்னரு மிராச தத்தால்
　　ஒன்பது பேர்பிர் மாக்கள்
நன்னய முடனே தோன்றி
　　நானிலம் படைத்துச் சீவர்
தன்னையும் படைத்துப் பார்த்துச்
　　சந்துட்டி யாயி னரே (உஉகூ)

உலகினிற் படைத்த யோனி
　　யுற்றநால் வகைய தாகும்
இலகிய தோற்றந் தானும்
　　எழுவகை யாகி நிற்கும்
குலவுமெண் பத்து நாலு
　　கோடியாம் பேத மாகும்
உலவிய வுடலிற் சூக்ம
　　உருவமா யமர்ந்தார் மூவர் (உ௩௰)

உந்தியே பிரமன் தானம்
உருத்திரற் குதரந் தானம்
செந்திரு மார்பன் வாழுந்
திருமிகு தானம் மார்பாம்
நந்தமர் எழிலார் கண்டம்
நலமுள விராட்டுத் தானம்
சுந்தரப் புருவ மத்தி
சோதியின் தான மாமே (உ௱௧)

பின்புமே யான சிருட்டி தா னெங்கும்
பிரபல மாகவே யுண்டு
அன்னதில் விண்டு மனுக்கபி லர்களாய்
ஆமையும் மச்ச முமாகி
நன்னர சிங்கம் வராகம்வா மனமே
ராமர்கள் மூவரும் நலமார்
கண்ணனு மாகிக் கற்கியு மாவான்
கடலுல களித்தலின் பொருட்டே (உ௱௨)

அடியவர் தமக்காய் அண்டத்தின் முடிமேல்
அப்பிரா கிருதலோ கமுமாய்
முடிவிலாப் பரம பதமது வெனவும்
முன்வகுத் தாங்கதில் தானும்
நெடியதோர் வடிவம் சாமள வர்ணம்
நித்யசூ ரியரொடு மமர்ந்தே
படியில்பாற் கடலிற் பள்ளிகோ ளமர்ந்தும்
பலதிருப் பதியிலும் அமர்வார் (உ௱௩)

வேதவி யாசநா ராயண முனியாய்
வேண்டிய வுருக்களை தரித்தும்
ஆதர வான பூமி சிதேவி
அவருடன் கூடியே களித்து

நீதமாம் ஆடல் பற்பல புரிந்து
நிறைந்தபின் மூதேவி தன்னைப்
போதமாய்க் கூடி அனைத்தையு முண்டு
பொருந்தினன் குழவியி னுருவம் (உ௱௪)

அப்புவக் காலந் தன்னில்
அகங்கார தத்து வத்தால்
ஒப்பிலா வுலகம் யாவும்
ஒழித்துமே லுயர்ந்து நிற்கும்
அப்பெருஞ் சலத்தின் மேலே
ஆலிலை மீதிற் பள்ளி
செப்பமாய்க் கொள்ளு மந்தச்
சீரிளங் குழவி தானே (உ௱௫)

பின்னரு மதுவே சாத்விக மாகிப்
பெரியதோர் வடிவமாய் வளர்ந்து
அன்னதோர் சலத்தை அடக்கியே யதன்மேல்
அரவணைப் பள்ளிகொண் டருளும்
முன்னமே சிருட்டி யானது போலே
முளைத்திடும் பிரமனே முதலாய்
இன்னதோர் விதமாய் முத்தொழில் நடக்கும்
எம்பெரு மான்திரு வுளத்தால் (உ௱௬)

ஏகாந்த வறிவுமிக ஒருபூ தத்துள்
இருந்திடிலோ பரத்துவமென் றியம்ப லாகும்
ஆகாயம் வாயுவொடு தேயு சேர்ந்தால்
அந்தரியா மித்துவமாய் அறைய லாகும்
வாகான அப்புவொடு நிலமுஞ் சேர்ந்தால்
வன்மையுள்ள வியூகமென வளர்ந்து நிற்கும்
நோகாமல் அப்புவின்மேற் பள்ளி யானை
நுவலரிய விபவமென நுவன்றிட் டாரே (உ௱௭)

அருமறையும் சிருட்டியையும் வேத னுக்கே
அன்றுரைத்தான் அர்ச்சையென வைந்தாய் நிற்கும்

பெருமையுறும் பின்சிருட்டி வைகுந் தத்தான்
பேசரிய பாற்கடலான் சொர்க்க விண்டு
புரிவுடைய அவதார மூர்த்தி யானோர்
புவனமெங்கும் கோவில்கொண்ட புண்ய மூர்த்தி
திருவுறையும் மூர்த்திகளும் ஐந்தாய் நிற்கும்
திறமையினல் பாஞ்சராத் திரமென் பாரே (உ௩அ)

எம்பிரான் மழையாகி இலக்குமியே நிலமாகி
விடுவச் சேனத்
தம்பிரான் ஏரியதாய்ச் சடகோபன் மதுவாகி
தழைத்தே யோங்கும்
அன்புமிகு நாதமுனி நளினைக்கர் மணக்காலர்
ஆள வந்தார்
அன்புவியிற் பெரியநம்பி யுடையவரும் வாய்க்கால்கள்
ஆயினரே (உ௩௯)

சீலமாம் பரம குருவரை யினுமே
சிறியவாய்க் கால்களாச் சென்று
கோலமார் குருவாங் கழனியி லிறங்கிக்
குளிரவே பாய்ந்தத னாலே
ஞாலமே தழைக்க வைணவப் பயிர்தான்
நலமுடன் விளைந்தது பண்டைக்
காலமே தொடங்கி ஓராண்வழி யாகிக்
கனத்தது பாஞ்சராத் திரமே (உ௪0)

மற்றதைக் குருவின் வாக்கினா லறிவீர்
மலினமாம் சமயங்கள் யாவும்
செத்தன வாகும் ஆதலா லதனைச்
செப்புதற் கிட்டமில் லாமல்
இத்துட னிதனை நிறுத்தினே மிதனல்
எம்பிரான டியவ ரிதனிற்
பற்றுவைப் பாரோ பழிப்பாரோ வறியேன்
பாலகன் மழலையஞ் சொல்லே (உ௪௧)

என்னூலிற் பலகுற்ற மிருந்திட் டாலும்
எம்பெருமான் புகழ்பேசி யிருப்பதாலே
இந்நூலைச் சிரீவைண வர்களும் மண்ணில்
இணையில்லாத் தாசர்களும் இகழ்ந்திடாமல்
முன்னூலாய் விளங்கிடவே செய்வா ரென்னும்
முடிவு கொண்டே சொல்லிவைத்தே னிந்தநூலைப்
பின்னூலென் றிகழாம லேற்றுக் கொண்டு
பிழைதிருத்தும் பெரியோரெம் பெருமானாரே (௨௪௨)

இப்படிக்கு நான்சொன்னேனென் றெண் ணாதீர்
இருடிகளிற் பராசரர்நா ரதர்வி யாசர்
செப்பரிய ஆழ்வார்க ளனைவோர் தாமும்
சீர்பெரும்பூ தூர்முனிவர் கூரத் தாழ்வான்
ஒப்பரிய திருவரங்கப் பட்டர் தாமும்
உபநிடதம் நால்வேதம் சாத்திரங்கள்
தப்பிகந்த புராணங்கள் இதிகா சங்கள்
தாமெல்லாஞ் சாற்றினதைச் சாற்றினேனே (௨௪௩)

இக்கதை படித்தோர் கேட்டோர்
இன்பமாய்ப் பிறர்க்குச் சொன்...
தக்கநற் புகழே பெற்றுச்
தாசராய்ச் செல்வ மோங்கி
மக்களைப் பெற்று வாழ்ந்து
வைகுந்த வாச னோடும்
ஒககவே சோதி யாகி
உள்கலந் திடுவர் தாமே (௨௪௪)




பிரபந்தம் ஒருநா லாயிரத் தினுக்கும்
பெருக்கவே வியாக்கியானம் செய்து
தரவந்த நாதன் கச்சியில் வாழும்
சாத்விக வுபயவே தாந்தி
அரவிந்த நாப னடியாரண் ணங்கார்
ஆரிய ரருளி லின்னூல்
ஒருவந்த மாக முடிவுற்ற தென்றும்
உலகினில் உலவுமவ் வருளால் (௨௪௫)

(வேதாந்த விழுப்பொருள் விளக்கம் முற்றிற்று).

